# கம்பனில் ஆழ்வார்கள் சாயல்





ப.ஸ்ரீ.

# கம்பனில் ஆழ்வார்கள் சாயல்




ஆசிரியர் :

பி. ஸ்ரீ. ஆச்சார்யா

" பி.ஸ்ரீ. "



விசாலம் பதிப்பகம்

மதுரை

முதற்பதிப்பு : ஜூன் 1978
உரிமை : ஆசிரியர்க்கு

●

கிடைக்குமிடம் :
விசாலம் பதிப்பகம்
11, வாணியர் இரண்டாவது சந்து,
திண்டுக்கல் சாலை
மதுரை-625 001

●

நூல் வகை :
இலக்கியக் கட்டுரைகள்
முகப்பாக்கம் ;
இராம சந்திரசேகரன்

விலை ரூ. 5/-



அச்சும், அமைப்பும் :
மல்லிகை
மேல அனுமந்தராயன் கோவில் தெரு
மதுரை-625 001

# கம்பனில் ஆழ்வார்கள் சாயல்

---

இந்நூலில் ஆசிரியர் எழுதி யுள்ள
ஏழுமணிக் கட்டுரையும் இதனை மிக்க
நன்னூலே எனநவிலும்; புலமை காட்டும்
நயமான மேற்கோள்கள்; பாம ரர்க்கும்
மென்னூலே நடையாலே! எனினும் பாய்ந்து
மின்னுகின்ற கருத்துக்கள், சிந்தனைகள்
வன்னூலே எனக்கூறும்! சுருங்கச் சொன்னால்
வரவேற்றுப் படிப்பதற்குப் பொன்னூல் தானே!

— பாரததாசன்

---

# பதிப்பகப் பாயிரம்

---

மூதறிஞர் பி. ஸ்ரீயார் நூலை விசாலம்

முதன்முதலாய் வெளியிட்டு மகிழ்ச்சி கொள்ளும்

ஆதரவு தமிழுலகம் நல்கும் என்றால்

அறிவார்ந்த நூல்பலவும் இன்னும் இன்னும்

கோதுகுறை ஏதுமின்றிப் பல்வாறான

கூறுகளில் கொணர்வதற்கே என்னாளும்! என்னாளும்!

தாதுறையும் மலர்போல மணக்கும் இந்தத்

தண்சுவைநூல் தமிழுலகீர் வரவேற் பீரே!



# என்னுரை

சட்டுரை ஒரு பழைய சொல்; புதிய பொருளில் இன்று பயன்படுகிறது. அதாவது, ஆங்கிலத்தில் Essay என்கிறார்களே, அப்பொருளிலே. இதற்கு அரணாவது போல் அமைந்து விட்டது வேர்ப்பொருளும்.

உறுதிச்சொல் ''கட்டுரை''க்கு உரிய அடிப்படைப் பொருள்; இது வெளிப்படை.

உறுதிச்சொல் பொருள் பொதிந்ததாகவோ, புதைந்த தாகவோ இருக்க வேண்டுமல்லவா? அப்போதுதானே நற்பயன் அளிக்கவல்லதாகும்.

"ஆலும் வேலும் பல்லுக்கு உறுதி, நாலும் இரண்டும் சொல்லுக்கு உறுதி'' என்பது பழமொழி. "நாலும் இரண்டும்'' முறையே நாலடியாரையும் திருக்குறளையும் குறிக்கும்.

'கட்டுரை''க்குப் புனைந்துரை என்னும் பொருளும் உண்டு. பொதுவாக, உறுதியாக உரைத்தலைக் கட்டுரைத்தல் எனலாம்.

என் கட்டுரைகளின் தன்மையை அவையே பேசும்; கற்றுச் சிந்தித்துப் பாருங்கள்.

ஐந்து நிமிடம் படிப்பது பதினைந்து நிமிடங்களுக்காவது உங்கள் சிந்தனைகளைத் தூண்டுகின்றதா? சோதனை செய்து பாருங்கள்.

இத்தொகுப்பை ஓர் இலக்கியத் தோப்பாக்க முயன்றிருக்கிறேன்; இதுதான் என் சாதனை; சோதனை வாசகர் கடமை.

''என் கடன் பணிசெய்து கிடப்பதே''

— ஆக்கியோன்

# பொருளடக்கம்

---







''கம்பன் அடிப்பொடிகளுக்கு
இந்தத் தொகுப்பு நூலை அர்ப்
பணித்துக் கொள்கிறேன்''

பி. ஸ்ரீ.

# 1. மனோன்மணீய ஆசிரியரின் நாட்டுப்பற்றும் ஆங்கிலப் புலமையும்

85 ஆண்டுகளுக்கு முன் தமிழில் தோன்றிய நாடகம் ஒன்றையே நாம் தமிழர்களின் நாடக இலக்கியமாகக் குறிப்பிடுகிறோம். இதுவே நம் இலக்கியத்தில் நாடக வறட்சிக்கு. வளர்ச்சிக்கு அல்ல,—ஒரு சான்றாகும்.

நாடகப் பண்பு தமிழ் மக்களின் இதயப் பண்பிலே ஒரு நிலையான இடம் பெற்றுள்ளது என்பதற்கு, முத்தமிழ்க் காப்பியங்களான சிலப்பதிகாரமும் கம்பராமாயணமும் சான்றுகள். இயல், இசை, நாடகம் (கூத்து) என்ற முத் தமிழிலே கூத்துக்கும் இடம் கிடைத்திருக்கிறதல்லவா? முத்தமிழே முழுத்தமிழ் என்று கருதியவர்கள், முத்தமிழால் வைதாரையும் வாழ்விப்பவன் முருகன் என்றனர்.

பண்டைத்தமிழில் நாடகம் ஒரு கிளையாக வளராததற்குச் சமணப் பெரியோர்களின் அன்றைய இலக்கியதுறை ஆதிக்கமே காரணம் என்று நம்புகிறவர்களில் நானும் ஒருவன்தான். சங்கரர்க்கு முன்பே சமணத்தைப் புறச் சமயம் என்று போராடி வீழ்த்தியவர் சைவ உலகின் தனி நாயகமான ஞான சம்பந்தப் பெருந்தகை. இது வரலாற்றுச் செய்தி. வைணவர்களும், சமண-பௌத்த ஆதிக்கத்திற்கு விரோதமாகச் சைவர்களோடு கருத்தொருமித்துக் கலந்து கொண்டனர். பௌத்தம் அறவே ஒழிந்தது; சமணம்

செல்வாக்கிழந்து சிறுபான்மையினரின் ஒரு கூட்டமாக ஒடுங்கி--ஒதுங்கி நின்றது. எனினும் வெல்லப்பட்ட சமண பௌத்தங்களின் ஜீவகாருண்யக் கொள்கை தமிழகத்தை ஆட்கொண்டது. (Captive Greece led Captive her proud conqueror Rome) அடிமைக்கிரீசு இறுமாப்புக் கொண்ட வெற்றி வீரம் பொருந்திய ரோமாபுரியை அடிமையாக்கி விட்டது என்பது போல.

புத்தர் பெருமானுக்கும் சமணப் பெரியோர்களுக்கும் உரிய 'கொல்லாமை' என்ற சிறப்புக் கொள்கை, சைவ வைணவர்களின் உயர் தனிக் கொள்கையும் ஆயிற்று.

இது இந்துசமய மறுமலர்ச்சியைப் பல்லவர் காலத்தில் சாத்தியமாக்கியது. அந்த நிலையில் முத்தமிழிலே சமணர்கள் வெறுத்த கூத்துக்கு இடமில்லாமலே போயிற்று. மகேந்திர வர்மபல்லவன் சமணனுயிருந்து அப்பர் என்றதிருநாவுக்கரசர் அருளால் சைவசமயத்திற்கு வந்தவன். அவன் ஒரு நாடகம் எழுத விரும்பினுன். 'குடிலன் கூத்து' என்று பொருள்படும் மத்த விலாசப் பிரகசனம் என்ற வடமொழித் தலைப்புடன் அதை ஒரு வடமொழி நாடகமாகவே எழுதிவிட்டான்.

அது ஒரு சமூக நாடகம் ; நடித்துக்காட்டவே எழுதப் பட்டது. ஆம்; இலக்கியமாக வாசிப்பதற்கு மட்டும் அல்ல அந்த நாடகத்தில் மகேந்திரவர்மன் கபாலிக சைவத்தையும் பாசுபத சைவத்தையும் கிண்டல் செய்கிருன் ; பௌத்த சமயத்தையும் இகழ்ந்து நகையாடுகிருன். சைவ சமயத்தை யும் நாடகத்தில் வரும் கபாலிகன் வெறுத்துப் பேசியபோதி லும், நாடக ஆசிரியன் தன் கருத்தும் அதுவே என்பதைப் புலப்படுத்தவில்லை. வீழ்ச்சி நிலையிலிருந்த பௌத்தத்தைக் கிண்டல் செய்வது போல் சைவத்தைப் பரிகசிக்கவில்லை.

சமணசமயம் அன்று மகேந்திரவர்மனை ஆட்கொண்டிருந்தது போலும். அப்பரால் இன்னும் அந்த அரசன் ஆட்கொள்ளப் படவில்லை என்றே ஊகிக்கலாம்.

தமிழின் நாடக வறட்சியை நன்குணர்ந்துதான் மனோன்மணீயத்தை ஆசிரியர் இயற்றி 1891இல் வெளியிட்டார். அடுத்த ஆண்டில் 'கமலாம்பாள் சரித்திரம்' என்ற நவீனத்தின் ஆசிரியரான ராமையர் இந் நாடகம் பற்றிய ஆங்கில விமர்சனம் ஒன்றை வெளியிட்டார். ஆங்கிலப் பயிற்சியுடைய தமிழர்களெல்லாம் மனோன்மணீயத்தின் அருமை பெருமைகளைத் தமிழ்ப் பண்டிதர்களைக் காட்டிலும் தெளிவாகத் தெரிந்து கொண்டார்கள். ஷேக்ஸ்பியர் பாணியில் அந்த மகா நாடகங்களின் போக்கைத் தழுவி ஒரு புதுமையான இலக்கியப் பெருமுயற்சி வெற்றிபெற்று விட்டது என்பதை அந்த நாளிலேயே ஆங்கிலம் கற்றிருந்த தமிழ் அறிஞர்களும் ரசிகர்களும் தெரிந்துகொண்டார்கள். ஒருமுகமாய் ஒப்புக்கொண்டார்கள். ஆனல் தனிமரம் தோப்பாகுமா ?

இந்த நாடக நூலைக் கல்லூரி வகுப்புகளில் அடிக்கடி பாடமாகப் பயன்படுத்திக் கொள்வதும், தமிழில் நாடக வறட்சியைத் தான் காட்டுகிறது. ஆசிரியர் சுந்தரம்பிள்ளையின் முயற்சியைப் பின்பற்றிக்கூட வேறெரு தமிழ் நாடக நூல் இதற்கு நிகரான நிலையில் நாளதுவரை எழுதப்படவில்லை என்பது வெளிப்படை. தமது நாடகத்தை வெளியிட்டு ஐந்து ஆண்டுகளுக்குப் பின் ஆசிரியர் சுந்தரம்பிள்ளை தமிழ்த்தாத்தா சாமிநாத ஐயருக்கு ஒரு கடிதம் எழுதினர். அவரும் இந்நாடகப் பகுதிகள் பாடமாக வைக்கப்பட்ட காலங்களில் சில திருத்தங்களைச் செய்து கொடுத்தார்.

எனினும் இந்த நாடகத்தின் தனிச்சிறப்பு முழுவதையும் அவர் உணர்ந்து பாராட்டினர் என்று சொல்லுவதற்கில்லை.

தமிழின் மறுமலர்ச்சிக்கு டாக்டர் சாமிநாத ஐயரின் சங்க இலக்கியப் பதிப்புகளும் ஒரு தூண்டுகோலாக உதவின. பாரதியின் புதுமைப் பாடல்கள் மறுமலர்ச்சியின் விளைவு என்று சொல்லவேண்டும். வ.வே.சு. ஐயர் கம்பன் மேதையை நவீன விமர்சன முறையில் கண்டுபிடித்ததும் மறுமலர்ச்சியை உருவாக்கிய சக்திகளில் ஒன்றாகும். இந்த முப்பெருஞ் சக்திகளால் தோன்றிய மறுமலர்ச்சிக்கு வித்து மனோன்மணீய நாடகத்தோற்றமே என்றால், அது மிகையாகாது. சாமிநாத ஐயர் உயிர்ப்பித்துக் காட்டிய பழமைக்கும் பாரதியார் கண்டுபிடித்த புதுமைக்கும் ஒரு பாலமாக உதவியது மனோன்மணீய நாடகத்தின் தனிச்சிறப்பு.

மனோன்மணீயத்தை மலையாள நாடு தந்த தமிழ்ச் செல்வம் என்று நான் குறிப்பிடுவது உண்டு. இன்று தமிழகத்தினின்றும் சேரநாடு பிரிந்திருந்தபோதிலும் அது இளங்கோ வடிகளையும், குலசேகரர், சேரமான் பெருமாள் ஆகிய பெருந் தமிழ்த்தொண்டர்களையும் தந்து, தமிழ் இலக்கியத்திற்கு வளமூட்டியுள்ளது. அதே மலையாள மண்ணில் தமிழ் மறுமலர்ச்சிக்கு வித்திட்ட மனோன்மணீயமும் தோன்றியிருக்கிறது.

ஆனால் மலையாளத்தில் பிறந்து வளர்ந்ததம்மை திராவிடத் தந்தை எப்படி அறிமுகப் படுத்தியுள்ளார் தெரியுமா ?

'கொடுமலை யாளக்
குடியிருப்பு உடையேன்'

என்றுதான் நாடகப் பாயிரத்தில் சொல்லிக் கொள்கிறார் :

அத்தகைய தமிழ்க்காதல் இவருக்கு; அந்த நாட்டு மொழி தமிழினின்று வேறுபட்ட ஒரு மொழியாகிவிட்டதே என்ற எண்ணத்தைத் தூண்டுகிறது இவரது தாய்மொழிப்பற்று. மலையாளிகள் பலர் தமிழ் நாட்டிலே தமிழரோடு தமிழ ராய்த் தோளிடித்து உறவுபூண்டு வாழ்கிறார்கள். தமிழ் மக்களும் கேரளப் பகுதிகளில் வாழ்கிறார்கள் ; வாணிபத் துறையிலும் ஈடுபட்டிருக்கிறார்கள். இவர் தந்தை பெருமாள் பிள்ளை ஆலப்புழை என்ற துறைமுகப்பட்டினத்தில் வணிகத் துறையில் பொருளீட்டிப் பிழைக்கும் வழி தேடிக்கொண்ட வரே. அவருக்கும் தமிழ்ப் பற்று அதிகம், வழிவழி வந்த தமிழ்க் காதல் என்ற குலதனம் தந்ததுதான் இந்த நாடகப் பொக்கிஷம்.

ஆலப்புழையில் குடியிருந்த போதிலும் மொழிப்பற்றி லும் பச்சைத் தமிழராகவே வாழ்ந்தவர் பெருமாள்பிள்ளை. மதுரைக்கு அருகில் உள்ள பிரதேசத்திலிருந்து வெகு காலத்திற்கு முன் ஆலப்புழையில் குடியேறித் தலைமுறை தலைமுறையாக வாழ்ந்தவர்கள். மதுரைச் சொக்கரைக் குலதெய்வமாக வழிபட்டு வந்தார்கள். சொக்கருக்குச் சோமசுந்தரர் என்பது வடமொழிப் பெயர். அப்பெயரைச் சுந்தரம் என்று சுருக்கித் தம் அருமைப் பிள்ளைக்குச் சூட்டி வைத்தார். இப் புதல்வருக்கு இளமையிலேயே வீட்டுக் கல்வியாகத் தமிழைப் புகட்டினார் ; அந்தச் சுவையை அமுதமாக ஊட்டி வந்தார்.

தமிழ் நாட்டிலேயே பிறந்திருந்தால்கூட இவ்வளவு தமிழ்ச்சுவை ஏற்பட்டிருக்குமோ, என்னவோ! இளமையிலே தமிழகச் சூழ்நிலையில் தாய்மொழியை அனுபவித்துக் கற்றே மில்லையே என்ற ஏக்கம் எக்களிப்பாகிக் கூத்தாடுகிறது மனோன்மணீய நாடகப் பாயிரத்திலே. பன்னிரண்டு

தாழிசைகளில் தமிழ்க் காதல் கும்மாளம் போடுவதை இந்தப் பின்னணியில் பார்த்துச் சுவைஞர்கள் அனுபவிப் பார்கள் ; மற்றையோர் மொழி வெறியைத்தான், ஆரிய வெறுப்பைத்தான் காணக்கூடும்.

இவர்களுக்குப் பாயிரத்தின் தனிச்சுவை புலப்படாது ; அதன் உட்பொருளும் விளங்காது. பெருமாள்பிள்ளை திருக் குறளிலும் திருவாசகத்திலும் ஈடுபட்டவர். தமிழர் பொது மறையின் ஈடுபாடுதான் 'ஒரு குலத்துக்கு ஒரு நீதி' என்று மனுவைச் சுட்டிக் காட்டுகிறது. திருவாசகத்திலுள்ள மோகம்தான் 17-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த சிவப்பிரகாச அடிகளைப் பின்பற்றி மறைகளைக் குறைகூறச் செய்கிறது.

அந்தச் சிவநேசர், 'திருவாசகத்திற்கு உருகாதார் ஒரு வாசகத்திற்கும் உருகார்' என்ற பழமொழியைப் பின்பற்றி அதற்கு ஒரு விளக்கம்போல்

'வேதம் ஓதின்
விழிநீர் பெருக்கி
நெஞ்சம் நெக்கு உருகி
நிற்பவர்க் காண்கிலேம் !'

என்று பாடியுள்ளார். அத்தகைய மனப்பான்மையோடு தான் சுந்தரம் பிள்ளையும்,

'மனம்கரைத்து மலம்கெடுக்கும்
வாசகத்தில் மாண்டோர்கள்
கனம்சடை என்று உருவேற்றிக்
கண்மூடிக் கதறுவரோ ?'

என்ற தாழிசையை அமைத்திருக்கிறார். மற்றப்படி இந்த ஆசிரியருக்கு வடமொழி வெறுப்பு உண்டு என்று கூறுவது

சரி அன்று; வடமொழிச் சமய நூல்களின் பொருளையும் இலக்கியக் கருத்துக்களையும் சிவப்பிரகாசரைப் போல் இப் பேராசிரியரும் தழுவிச் செல்பவர் தாம்.

வடமொழியாளர்கள் வடமொழியையே தேவபாஷை என்பார்கள் ; மற்ற மொழிகள் 'மிலேச்ச பாஷை' என்று எண்ணம். கலைமகளுக்கு வடமொழியும் தமிழும் இரு விழிகள். 'வடமொழி தென்மொழியெனவே வந்த இரு விழி என்று பாயிரமும் உறுதிப்படுத்துகிறது. அப்படியிருக்க, வடமொழியாளர் அந்த விழிகளில் வலது விழி வடமொழி என்று கருதுவது போல் தம்மொழிக்கு ஏற்றம் கொடுக்கிறார் களே என்று நோவுபடுகிறது திராவிட நெஞ்சு !

இதை எவ்வளவு நாகரிகமாய்க் கிண்டல் பண்ணுகிறார் இவர் ! கலைமகள் கிழக்கு நோக்கி வீற்றிருக்கிறாள் என்பதை நீங்கள் மறுக்கவில்லையே என்றுதான் கேட்கிறார். அப்படியானால் வடமொழி தென் மொழிகளில் எது வலது விழி என்பதை நீங்களே தெரிந்து கொள்ளுங்கள் என்கிறார். உண்மையில் இவர் போராட்டம் ஒருவகை அன்புப் போர் தான். வடமொழியாளரை நோக்கி, 'உங்களுக்கு கிழக்கு மேற்குத் தெரியுமா ?' என்றுதான் நகைச்சுவையோடு கேட்கிறார். இத்தகைய மொழிச்சண்டை இன்றும் ஒழிந்த பாடில்லையே என்று நினைக்கும்போது நமக்கும் சிரிப்பு வரத் தான் செய்கிறது. மனோன்மணீய ஆசிரியரின் பெயரால் பூசலிடுபவர்பால் அந்தத் தமிழ்க் காண்கிறோமில்லை. இவர் காதலைத்தான் தொண்டுபோல் உண்மையான தமிழ்த் தொண்டு செய்யவும் இவர்கள் முன்வரவில்லையே.

சுந்தரம் பிள்ளையின் ஆராய்ச்சிக் காதலும் ஒரு தனிச் சிறப்பு வாய்ந்தது. சிவபெருமான் நெற்றிக்கண்ணைத் திறந்

தாலும், 'குற்றம் குற்றமே!' என்ற நக்கீரனாரைப் போன்றவர் சுந்தரனாரும். உள்ளது உள்ளபடியே வருணிக்கப்பட வேண்டும் என்ற மனநிலையோடுதான் சங்க நூல்களின் இயற்கைப் பாநலத்தை மதிப்பிட்டிருக்கிறார். இந்த மனப் பான்மையுள்ளவர், கம்பன் காப்பியத்தையும் உயர்ந்த கவிதையாக ஒப்புக்கொள்ளவில்லை.

இவரது ஆராய்ச்சி மனப்பான்மை விஞ்ஞானியின் மன நிலையையே நினைவூட்டுகிறது; கலைஞனின் மனநிலையை அன்று. மனோன்மணீயத்திலேதான் இவர் தமிழ்த் தொண்டை நாம் கண்டு மதிப்பிட வேண்டியதிருக்கிறது. ஷேக்ஸ்பியர் நாடகங்களை ஆராய்ந்து சுந்தரம்பிள்ளை மனோன்மணீயத்தை இயற்றியிருந்த போதிலும், இயற்கைப் பாநலக் கொள்கை இவரை ஆட்கொண்டிருந்தது; ஆகவே இந்த நாடக இலக்கியத்தில் அறிவுத்திறனையும் சாதுரியத்தையும் புலமைத் திறனையும் சக்தி, உள்ளொளி (Power and inspiration) ஆகிய இரண்டு பண்புகளை விட அதிக அளவில் காண்கிறோம். தாய்மொழிப் பற்றையும் சங்கப் பொற்காலம் என்று மதிக்கப்பெறும் அந்தச் சங்ககாலப் பாடல்களின் மீதுள்ள பெருங் காதலையும் அடிப்படையாகக் கொண்டே இவர் நாட்டுப் பற்றும் தழைத்திருப்பதைக் காண்கிறோம்.

ஆரிய திராவிட விவகாரங்களில் ஈடுபடுவோர் தேச பக்தியுள்ளவராக இருக்க முடியுமா? இந்தக் கேள்வி இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலே—சிதம்பரனாரின் சுதேசி இயக்கம் தோன்றிய காலத்திலேயே—எழுந்தது. நான் நெல்லை இந்துக் கல்லூரி மாணவனாக இருந்த 1906 லேயே இப்படி ஒரு வினாவை எழுப்பி, மாணவர்களாகிய நாங்கள் இந்துக் கல்லூரிப் பட்டிமன்றத்திலே வாதமும் எதிர்வாதமும் செய்துகொண்டிருந்தது இப்போது நினைவுக்கு

வருகிறது. ஆனால் திராவிடத் தந்தை தம் நாடகத்தில் நாட்டுப்பற்றைக் குறிப்பிடுகிறார், கதாநாயகியின் தந்தை மூலமாக.

'வேற்படைத் தலைவரே! நாற்படையாளரே' என்று விளித்து ஜீவகவழுதி பேசுகிறான். தாம்பிரபருணி வெள்ள மிட்டு ஓடுகிறது; அலையெறிந்து முழங்குவதைக் கேளுங்கள் என்கிறான் பாண்டியன். தாம்பிரபருணி நீரைப் பருகியவர் கள் அந்த முழக்க உரையின் பொருளையும் தெரிந்து கொள் வார்கள். முதுநதிமாதா முழு சுதந்திரத்தையும் நமக்கு நினைவூட்டுகிறாள். அன்னியன் கைப்படாத இந்த நதியின் கற்பை நாம் காப்பாற்ற வேண்டும். அவள் கூக்குரல் இது அந்தத் தாய்—உங்களை வளர்த்தவள்—இப்போது வாழ்த்து கிறாள், போரிடச் சொல்லுகிறாள். இப்படிப் பேசிக் கொண்டே போகிறான் ஜீவகன்.

தன் பேச்சினிடையே சுதந்திரக் கொள்கைகளை, முத்துக்களை உதிர்ப்பது போல், உதிர்க்கிறான். ஜே! ஜே! என்று படைவீரர்கள் இடைஇடையே வீரமுழக்கம் செய் கிறார்கள். தமிழ் மொழிக்கு ஜே! என்கிறார்கள். ஜீவகன் தமிழ்மொழி தந்த தன் குலப் புரோகிதனான அகத்தியரையும் அவர்களுக்கு நினைவூட்டுகிறான்.

'விந்தம் அடக்கினேன்
தந்தநல் தமிழ்மொழி
தற்சுதந்தரம் அறும்
அற்பர்வாய்ப் படுமோ?'

என்கிறான்.

இப்படி ஜீவகன் உரையாடுவதே ஆசிரியரின் ஆங்கிலப் புலமைக்கு ஒரு சான்றுதான். மேலே சொன்ன அடிகள்,

"We have the letters that Cadmus gave
Think ye that he meant them for slave?

என்பதைத்தான் நினைவூட்டுகின்றன.

'சுதந்தரம் அவர்க்குஉயிர் :
சுவாசம் மற்றன்று'

என்று ஒரு மகாவாக்கியம் சொல்லுகிருனே ஜீவகன், அதுவும் ஒரு ஆங்கிலவாக்கியத்தின் மொழிபெயர்ப்புத்தானே.

'Liberty is the breath of our nostrils என்ற வாக்கியத்தை ஆங்கிலம் கற்றவருள் அறியாதார் இருக்க முடியுமா? சுந்தரம்பிள்ளையின் சுந்தரமான மொழிபெயர்ப்பு மூலத்தின் பொருளை மேலும் அழுத்தமாக வெளியிடுகிறது.

'அந்தணர் வளர்க்கும்
செந்தழல் தன்னிலும்
நாட்டு அபிமானம் உள்
மூட்டிய சினத்தீ
அன்ரே வானேர்க்கு
என்றுமே உவப்பு?'

—அதாவது அக்னி ஹோத்திரத்தைக் காட்டிலும் நாட்டுப் பற்று உள்ளவர்களின் தர்மா வேசமே தேவர்களுக்கு உவப்பாகும் என்ற கருத்து ஆங்கிலம் கற்றவர்க்குத்தானே உதயமாயிருக்க முடியும்.

'பாஷாபிமானமும் தேசாபிமானமும்' என்று ஜீவகன் கூறும்போது, சுந்தரம்பிள்ளை தான் பாஷாபிமானத்தை அடிப்படையாகக் கொண்டு தேசாபிமானத்தை வெளியிடு

கிறார் என்று தெரிகிறது. ஆசிரியருக்குப் பாஷாபிமானம் தான் நாட்டுப்பற்றின் ஆணிவேர் என்பது கூர்ந்து நோக்கத் தக்கது.

'உரிமைமேல் ஆண்மை
பாராட்டார் சாந்தம்
பெருமையில் பிணத்திற்
பிறந்ததோர் சீதம்'

என்பது, தமிழ் ஒன்றே தெரிந்த பண்டிதர்க்கு அவ்வளவு விளங்கக்கூடியதில்லை.

ஜீவகன் பேச்சு முழுமையும் ஷேக்ஸ்பியர் நாடகங்களில் வரும் சிறந்த பேச்சாளர்களை நினைவூட்டுவதுதான். சுந்தரம் பிள்ளையின் அறிவுத்திறனும், கவித்திறனும் சேர்ந்து தமிழுக்கு ஒரு புது மெருகு கொடுத்திருக்கிறது. இந்தத் தமிழ்நடை பண்டிதர்களுக்கு ஒரு புதுமைதான். இது ஒரு மறுமலர்ச்சித் தமிழேயாகும். ஆனால் இந்த மறுமலர்ச்சித் தமிழ், சங்க காலம்தொட்டு வளர்ந்து வந்திருக்கும் தமிழோடு தமிழாய் ஒன்றுபட்டுத் தாம்பிரபருணியின் சாரற்கால நீரோட்டம் போல் தெளிந்து செல்லுவதைக் காண்கிறோம்.

'பாண்டியர் உரிமைபாராட்டும் பண்பினர்' ; 'நீர் ஏற்றிடும் காயம் சித்தம் களித்து ஐயமாது உமக்கு முத்த மிட்டு அளித்த முத்திரை' ; 'புண்ணோ? புகழின் கண்ணோ'. இப்படியெல்லாம் தமிழைப் பயன்படுத்திக் கொள்ளுகிறார், ஆங்கிலேயன் தன் தாய்மொழியைத் தன் சிந்தனையை வெளியிடும் ஒரு செம்மைப் பெருங்கருவி ஆக்கிக்கொண்டிருப் பது போலவே. இத்தகைய மறுமலர்ச்சித் தமிழைத் தமிழ் மாது முத்தமிட்டுத் தன் பொக்கிஷசாலையில் சேர்த்துக் கொள்வாள் எனக் கருதுவது மிகையாகுமா? தமிழ் ஒன்றே வல்லவர் இந்தத் தமிழைக் கையாள முடியுமா ?

உடம்புக்கோ உயிருக்கோ சேதம் வரக்கூடுமே என்று நினைப்பவர்கள் இங்கேயிருந்தால் சொல்லிவிடுங்கள் என்கிறான் பாண்டியன்.

'மானமோடு அவரைஇம்
மாநகர் அதனுள்,
சேமமாய் இன்று
இருத்திடுவம் திண்ணம்
உத்தம மாதர்கள்
உண்டு, மற்றுஆங்கே
எத்தனையோ பேர்
இவர்க்கு அவர்துணையாம்'

என்று கிண்டலாய்ப் பேசி, அதை மறுக்கும்படி படை வீரர்களுக்கு உற்சாகமூட்டி விடுகிறான்.

பிறகு நகைச்சுவையை விட்டு முகத்தை மாறவைத்துக் கொண்டு, 'விஜயலட்சுமி காத்திருக்கின்றாள்!' என்கிறான். அதன்பின் திடீரென்று தன் அருமைச்செல்வி மனோன்மணியை நினைவூட்டுகிறான். 'அவள் நோன்பு மேற்கொண்டிருக்கிறாள் உண்ணா நோன்பும் பிறவும். உங்கள் ஜயபேரிகை கேட்டால் அன்றி நோன்பை முடித்துக்கொள்ள மாட்டாள்' எனக் கூறுகிறான்.

அவர்கள் மனோன்மணிக்கு ஜே! இளவரசிக்கு ஜே! என்று முழங்குகிறார்கள். கடைசியாக ஜீவகன்,

'நம்தாய் தமர் நம்காதலர்
... ... ... ...
நொந்து ஆழ்துயர் தந்தே இவண்'

வருவோரைத் தக்க முறையில் இனி வரவேற்போம் என்று பல்லைக் கடித்துக்கொண்டு, 'எதிரிகளின் பற்களை உடைப்போம்' என்கிறான்.

அப்பால் 'அடிப்போம்' என்று தொடங்கி, இடிப்போம், குடல் எடுப்போம், இடுப்பு ஒடிப்போம், சிரம் உடைப்போம், என்கிருன் ஆவேசமாக.

'பொடிப்போம், வசைதுடைப்போம், உயிர்
குடிர்போம் வழி தடுப்போம், பழி
முடிப்போம், இனி நடர்போம்'

எனக் கூறி, முரசுகொட்டிப் புறப்படுங்கள் என்கிருன். படைவீரர்கள் முரசு அடித்து நடைபோடுகிருர்கள். படைப் பாணர்கள் வீரப்பாடல்கள் பாடுகிருர்கள். நான்காம் அங்கம் முதற் களத்தில் திரை விழுகிறது.

## நாட்டுப்பற்றின் பொருளும் பயனும்

'அப்படிச் சொல்லு, பாண்டியா!' என்று பாரதியாரே 'சபாஷ்' போட்டு வரவேற்கும்படி அமைந்துவிட்டது ஜீவகன் பேருரை. ஆனல் இந்தப் பாண்டியனே சர்வ சாதாரணமான பொம்மை அரசர்களில் ஒருவனே. இவன் பெருமையெல்லாம் சொந்தப் பெருமை அன்று; இரவல் பெருமைதான், பரம்பரைப் பெருமைதான்.

'ஆதி இன்னதென்று
ஓதுவதற்கு அரிய
வழுதியின் தொழுகுலம்'

என்று அகஸ்தஸ் சீசர் காலத்திற்கு முன்பே வரலாற்றுப் புகழ்பெற்றிருந்த பாண்டியர் குலத்தின் தொன்மை மாட்சி சுட்டிக்காட்டப் படுகிறது சுந்தரம்பிள்ளையால் ஜீவக பாண்டியன் வாக்கினுலேயே. அவ்வளவு தூரம் நீள நினைத்து நித்தமும் அந்தப் பரம்பரையைத் தொழுதுகொண்டு, தான் உருப்படியாக ஒன்றும் சாதித்து விடாமலே, குடிலன் கைப் பொம்மையாக ஆடிக்கொண்டிருப்பவன் இந்த ஜீவகவழுதி. சாதாரணத் தமிழர்களும் இன்று பிரமாதமாய்ப் பழம்

பெருமை பேசுகிறார்கள். இதை நினைவூட்டுவதுபோல் சுந்தரம்பிள்ளையின் ஜீவகனும் பண்டையோரான பாண்டியரின் குலப்பெருமையை நினைவூட்டிக் கொள்கிறான்.

போர் வந்த பின்புதான், இந்த வழுதிக்குத் தேசபக்த வெறியும் வந்திருக்கிறது. சுதந்திரத்திற்காகப் போரிடாத சாந்தம் பிணத்தின் பொறுமைதான், குளிர்ச்சிதான் என்ற ஞானஉதயம் ஏற்படுகிறது. தேச பக்தியை ஒரு மதமாக்கி மதவெறியாக்கி உபதேசிக்கிறான். தன் படை வீரர்களுக்கு. இப்படியெல்லாம் பேசுகின்ற மனப்பான்மை சாமானியமாக இருக்கக்கூடுமா என்று கேட்கலாம். ஆனால் இத்தகைய மனப்பான்மையும் பரம்பரையால் கிடைத்த பாக்கியம் தானே ; சொந்த மூளையாலும் முயற்சியாலும் சாதித்துக் கொண்ட சாதனை இல்லையே.

ஜீவக மன்னனுக்கு மற்றப்படி புத்தியும் சக்தியும் குடிலன் மந்திரியிடம் கிடைத்த பிச்சைதான் குடிலன் நிழலில் மறைந்து செயற்படுகிறவனே இந்த மன்னன்.

> ' நாமே அரசும் நாமே யாவும் ;
> மன்னவன் நமது நிழலில் மறைந்தான் '

என்பது குடிலன் தனிமொழி (தனிமை உரை). இத்தகைய மந்திரிக்கு நாட்டுப்பற்று இருக்க முடியுமா ?

'மதுரையை நெல்லை இனிமேல் வணங்குமோ ?' என்று குடிலன் தன்னைத்தானே கேட்டுக்கொள்கிறான். பாண்டி நாட்டிலும் மதுரையிலிருந்து நெல்லையைப் பிரிக்கும் பிரிவினைச் சூழ்ச்சிக்கும் நாட்டுப் பற்றுக்கும் என்ன தொடர்பு இருக்கமுடியும் ? பாண்டியன் பாண்டவர்களைப் பற்றிக் கொண்டு தன் மரபைச் சந்திரமண்டலத்திற்கே உயர்த்தி விடுகிறான் ; ஆனால் குடிலனோ அது குறித்து என்ன நினைக்கிறான் தெரியுமா ?

அரசவம்சக் கிரமத்தை ஆராய்ந்து பார்த்தால், ஒரு காலத்தில் 'ராத்திரி ராஜா' வாக இருந்தவனே நாளடைவில் பகலிலும் ராஜாவாகப் பரிணமித்து விட்டானே என்று தோன்றுகிறது குடில புத்திக்கு.

'சில தலைமுறையாப் பல வருடஞ் செலில்
இந்துவில் இரவியில் வந்தோர் எனவே
மூடவுலகம் மொழியும்'

என்பது குடிலன் ஊகம். இந்த ஊகமே யோகமாகிவிடும் என்று கனாக்காண்கிறான்.

குடிலன் தானும் அத்தகைய சந்திர வம்சத்தை அடைந்து விடலாம் என்று நம்புகிறான். அதற்கு இடையூறாக இருப்பது, தீது நன்று என்று பாகுபாடு செய்யும் பகுத்தறிவுதானே. அந்தப் பகுத்தறிவுக்கு ஆதாரமான மனச்சான்றைத்தான் குடிலன் கழுத்தை நெரித்துக் கொன்றுவிட்டானே! இத்தகைய குடில புத்தி கடைசி வரை வெற்றி காணப் போவதில்லை என்பது சுந்தர முனிவரின் சித்தாந்தம்.

சுந்தர முனிவர் வேறு யாரும் இல்லை; கோடக நல்லூர் சுந்தர சுவாமிகளே. இவரை ஞானாசிரியராகக் கொண்டு அத்வைத வேதாந்த ஞானம் பெற்றுக்கொண்டவர் ஆசிரியர் சுந்தரம்பிள்ளை. நெல்லையில் சுந்தர முனிவரைச் சுந்தரம்பிள்ளை பன்முறையும் சந்தித்துச் சிந்தித்து வேதசிகையான வேதாந்தத்தைப் பற்றுக் கோடாகக் கொண்டார் என்பது ஆசிரியரின் வாழ்க்கை வரலாற்றை அறிந்திருப்பவர்கள் அனைவரும் நன்கறிந்ததே

சுந்தரம் பிள்ளை வேதசிகைக்கோ, வடமொழிக்கோ விரோதி அல்லர் என்பது வெளிப்படை. மனோன்மணீயத்

தின் முகப்பிலே கடவுள் வணக்கமாய் அமைந்திருக்கும் வெண்பா,

வேத சிகையும் விரிகலேயும் மெய்யன்பர்
போதமும் போய்த்தீண்டாப் பூரணமே !— பேதமற
வந்தெனை நீ கூடுங்கால் வாழ்த்துபவர்யார் ? வாராக்கால்,
சிந்தனையான் செய்ம்முறைஎன் செப்பு

சுந்தரமுனிவரே சங்கர ஞானமாகிய அத்வைதத்தைச் சுந்தரம் பிள்ளைக்கு உபதேசித்தவர். அச் சுந்தரமுனிவர் 'அதிவருணுசிரமி' சாதி வரையறை இல்லாமல் சஞ்சரித்துக் கொண்டிருந்தவர் ; ஆசாரக் கட்டுப்பாடுகளைப் பின்பற்றுவதில்லை. அவரிடம் சுந்தரம்பிள்ளைக்குப் பற்றும் பக்தியும் ஏற்பட்டதில் வியப்பில்லை. மனோன்மணீயத்தின் முதல் அங்கத்து முதற் களத்திலேயே சுந்தரமுனிவர் தோன்றுகிறார். ஜய ! ஜய ! விஜய தவராஜேந்திர, என்று யாவரும் தொழுது கோஷிக்கிறார்கள். 'யாவரும்' என்பதில் சுந்தரம் பிள்ளையும் சேர்ந்துகொண்டு தொழுவதாய்க் கருதலாம்.

சுந்தரமுனிவர், 'சம்போ ! சங்கர ! அம்பிகாபதே' என்று அரசனை எச்சரித்து ஆட்கொள்ளுகிறார். அந்த வடமொழி வாக்கியத்தில் சுந்தரம்பிள்ளைக்கு வெறுப்பு இருக்க முடியுமா ? சுந்தரமுனிவரின் அத்வைதம் வடமொழி வெறுப்பையும் போக்கிச் சுந்தரம் பிள்ளையை ஆட்கொண்டு விட்டது. அதே அத்வைதமும் சைவப்பற்றும் சுந்தரம் பிள்ளையின் பரம்பரைச் சைவத்திற்கும் உறுதியான அடிப்படையாக வாய்த்துவிட்டன.

மனோன்மணீய ஆசிரியர் வடமொழியைத் தீண்டாத நிலையில் விட்டுவிடவில்லை ; வடசொற்களை வாரி வீசுகிறார், செந்தமிழ்ச் சொற்றொடர்களுக்கும் இடையே.

இவருக்குத் தீண்டாதது 'போதமும் போய்த்தீண்டாப் பூரணமே!' என்று இவர் கூறும் அந்த மெய்ப்பொருள் ஒன்றுதான். இராமாயணத்தைத் தென்னகத்தில் சாதி வளர்ப்பதற்கு ஒரு காரணமாகக் கருதிய சுந்தரம் பிள்ளை விபீஷணனை தேசத்துரோகியாக மதித்துக் குடிலனை,

'பண்டு இராகவன்தன்
பழம்பகை செற்று
வென்றதோர் இலங்கை
விபீஷணன் காத்தவாறு
இன்றுநீ வென்றநாடு
இனிது காத்திடுவன்'!

என்று புருஷோத்தமனிடம் சொல்ல வைத்தவர், அத்வைத வேதாந்தத்தைத் தம் சைவப்பற்றுக்கும் நாட்டுப்பற்றுக்கும் ஓர் உறுதியான அடிப்படையாக்கிக் கொண்டார்.

இவருக்கு நாட்டுப்பற்று, தமிழ்நாட்டுப் பற்றுத்தான். நிலமடந்தைக்கு அழகொழுகும் திருமுகமாய்ப் பரதகண்டத்தைப் போற்றுகிறார் என்பது உண்மையே. ஆனால் அந்தத் திருமுகத்தில் நெற்றியாக அமைந்துள்ளது தெக்கணம் என்ற தென்னகம் ஆகும். அத்தென்னகத்தில் சிறந்தது திராவிட நல் திருநாடு என்ற தமிழ்நாடு; இது நெற்றியில் திலகம் போலக் காண்கிறதாம். திலகத்தின் நறுமணம்போல் தமிழின் புகழ் மணக்கிறது என்கிறார். கடவுளுக்கு அடுத்த படியாக இவர் தமிழ்த் தெய்வத்திற்கு வணக்கம் செலுத்துகிறார். தமிழ்த் தெய்வமே தமிழ் நாட்டுக்கும் புகழ் அளித்திருக்கிறது என்பது குறிப்பு.

தமிழ்க்காதலை அடிப்படையாகக் கொண்டுள்ள நாட்டின் பற்றே இவர் நாட்டுப்பற்று. பரதகண்டம் நிலமகளின்

முகமாயிருந்த போதிலும் அதன் உண்மையான பெருமை தமிழகத்தைத் தன்னகத்தே கொண்டிருக்கும் பெருமைதான். பரதகண்டம் ஒரு நாடு அன்று, தேசம் அன்று. அது ஆசியாக் கண்டத்தின் உட்கண்டமாகிய நிலப்பகுதிதான்.

டாக்டர் கால்ட்வெல் துரையைப் பின்பற்றிப் பேராசிரியர் சுந்தரம்பிள்ளை தமிழாராய்ச்சி செய்திருக்கிறார். மிகப் பழைய மொழிகளான சுமேரியம், எகிப்தியம், சீனம் முதலியவற்றோடு அரியாசனத்தில் சரியாசனம் பெற்றிருப்பது தமிழ்; 'சதுமறை ஆரியம் வருமுன்' தமிழே ஏகாதிபத்தியம் புரிந்திருக்கவேண்டும் என்பது சுந்தரம்பிள்ளையின் ஊகம். சிந்துவெளி நாகரிகம் வேதகாலத்திற்கும் முற்பட்டது. அந்த நாகரிகத்தோடு தொடர்புடையது தமிழ் மொழி. இம்மொழி இந்திய நாடு முற்றிலும் வழங்கி வந்தது. இப்படியெல்லாம் ஆய்வுரை வழங்கும் ஆராய்ச்சியாளர்கள் திராவிடத் தந்தையையே தங்கள் முன்னோடியாக மதித்துப் போற்றுகிறார்கள்.

தமிழகம்தான் இவர்களுக்குத் தாயகம். பாரதம் என்ற தாயகத்தின் ஒரு பகுதியாகத் தமிழகத்தை மதித்துச் செந்தமிழ் நாட்டை 'எங்கள் தாய்நாடு எங்கள் தந்தையர் நாடு' என்று சொல்லிக் கொள்வதில் இவர்களுக்கு மன நிறைவு ஏற்படுவதில்லை. ஷேக்ஸ்பியர் நாடகங்களைப் படித்துப் படித்து ஆராய்ந்திருக்கும் மனோன்மணீய ஆசிரியர் ஆங்கில இலக்கியத்தைப் பொதுவாகவும் ஆராய்ந்து கற்றிருக்கிறார். அங்கங்கே கண்ட சிறப்புக்களையும் அழகுகளையும் கருத்துச் செல்வங்களையும் தமிழ் நாட்டிலே கொண்டுவந்து கொட்டித் தமிழ் வளர்க்கவேண்டும், தமிழ் மக்களோடு அச்செல்வங்களைப் பகிர்ந்து கொள்ளவேண்டும் என்றெல்லாம் பேராசை கொண்டவர் மனோன்மணீய ஆசிரியர்.

ஆங்கில இலக்கியங்களைத் தமிழ்க் கண்ணோடு பார்த்து ஆராய்ச்சி அறிவையும் தீட்டிக் கூராக்கிக் கொண்டவர் சுந்தரம் பிள்ளை. ராஜபாஷை என்ற திமிருடன் அழகான ஆங்கிலம் உலகாளும் என்றவாறு ஆதிக்கம் புரிந்து நம்ம வரை அடிமை கொண்டிருந்தது அல்லவா? — அந்த ஆங்கில மொழியையும் தமிழுக்குத் தொண்டு செய்யப் பயன் படுத்திக் கொண்டது மனோன்மணீய ஆசிரியரின் மேதை.

தம் நாடகத்திற்கு முதலாவது அநுபந்தமாக இந்த ஆசிரியர் முதற்பதிப்பில் சேர்த்துள்ள விவரணக் குறிப்பு களில் ஒன்று 'ஆரிய பாஷை பிரபலப்படுமுன் தமிழ் போன்ற ஒரு மூலபாஷை ஐரோப்பாவிலும் ஆசியாக் கண் டத்திலும் பரவியிருந்ததென்பது பல பாஷைகளையும் கற்று உணர்ந்த ஆங்கிலேய பண்டிதர்களின் துணிபு' என்பது.

மூன்றாவது அநுபந்தத்திலே லிட்டன் பிரபு எழுதிய Secret way (இரகசிய வழி) என்ற ஆங்கிலக் கவிதைகளைக் குறித்துப் பிரஸ்தாபிக்கிறார். இப்பாடல்களில் பொதிந் துள்ள கதை ஆசியாவில் உறையும் அநாகரிக மக்களால் வியந்து பாராட்டப்படுகிறது என்றும், அக்கதை சிற்பக் காட்சிகளாக அவர்கள் கோவில்களிலும் அரண்மனை களிலும் இல்லங்களிலும் காணப்படுகிறதென்றும் இந்த ஆசிரியர் கூறியுள்ளார். இக்கதையைச் சில மாற்றங்களுடன் நாடகத்தில் (வரும் சிவகாமி சரிதைக்கு) உபயோகித்துக் கொண்டிருக்கிறார். சிவகாமி சரிதை என்னும் கதை Vicar of wake field என்று பிரசித்தி பெற்ற ஆங்கில நாவலில் வரும் ஒரு கதைக் கவியை தழுவி அமைந்தது. சிவகாமி சரிதை கவிதை அம்சத்தில் ஆங்கில மூலத்தையும் வென்று விடுகிறது என்பது அந்த ஆங்கிலப் பாடல்களையும் இந்தத் தமிழ்ப் பாடல்களையும் ஒப்பிட்டுப் படிப்பவர்களுக்கு நன்று புலனாகும்.

இவற்றையெல்லாம் உள்ளத்தில்கொண்டு மனோன் மணீய நாடகத்தை இலக்கியமாகப் படித்து அனுபவிக்க வேண்டும். அப்படி அனுபவிப்பவர்களுக்குத் தமிழ்ப்பற்றும், நாட்டுப்பற்றும் அதிகரிக்கும் என்பதில் சிறிதும் ஐயமில்லை. அப்போது நாட்டுப்பற்றின் பொருளையும் பயனையும் குறித்து இந்த ஆசிரியரின் கருத்துக்களையும் தெளிவாகத் தெரிந்துக்கொள்வது எளிதாகும்.

சுந்தரம்பிள்ளை காலத்தில் தேசியம் நமது நாட்டில் புகுந்து தேசபக்தியையும் சுதேசி உணர்ச்சியையும் வளர்த்து விடவில்லை. மனோன்மணீயம் வெளிவந்த 15-ஆம் ஆண் டில்தான் சுதேசி இயக்கத்திற்குரிய சிறப்பியல்புகள் உருப் பெற்றுப் பிரச்சாரம் செய்யப்பட்டன. 1907இல் நெல்லைத் தேசாபிமான சங்கம் தீவிர தேசியத்தை அதிதீவிர சுதேசிய மாக்கி நெல்லை மக்களிடையே பரப்பத் தொடங்கியது. அதற்குமுன் மனோன்மணீய ஆசிரியரின் திராவிடக் கொள் கைகளே நெல்லைத் தமிழன்பர்களை ஆட்கொண்டிருந்தன.

அத்தகைய நிலையில் நாட்டுப்பற்றின் பொருள், தேசீயத் தன்மானத்தை முதல் முதல் உருவாக்குவதுதான் என்பதை எவரும் உணர்ந்திருக்க முடியாது. அந்தத் தன்மானத் திற்கு அரணாகவும் பாதுகாப்பாகவும் அன்னிய விலக்கும் வேண்டியதுதான் என்ற சிதம்பரனாரின் கருத்தை யார் எப்படி உணர்ந்திருக்க முடியும்? தன்மானத்தையும் அன்னிய விலக்கையும் இணைப்பது தேசீயக் கல்வியே என்பதும் சிதம்பரனாரும் பாரதியாரும் உருவாக்கிய கொள்கையாகும்.

ஆம், Self-reverence, Self-knowledge, Self-control இம்மூன்றையும் வாழ்க்கைக்கு ராஜசக்தி தரும் முப்பொரு ளாகச் சுட்டிக்காட்டிவுள்ளான் ஆங்கிலக் கவியான

டெனிஸன். அம்மூன்றும் தம் சுதேசி இயக்கத்திற்கு இன்றியமையாதவை என்று சிதம்பரனுர் கருதியதாக நான் ஊகித்துப் பார்ப்பது உண்டு. தேசியத் தன்மானம்தான் National self reverence. தேசியத் தன்னறிவைப் புலப்படுத்தும் சாதனம் தேசியக் கல்விதான். அன்னிய விலக்கு என்பது அன்னியரை வெட்டும் பேயோ பூதமோ அன்று; தன்மானத்தையும் தன்னறிவையும் வேலியிட்டு வளர்க்கும் பாதுகாப்பு முயற்சிதான். இப் முப்பொருளாகிய முழுப் பொருளும் சுதேசி இயக்கத்திற்கு இன்றியமையாத மெய்ப் பொருள்களாகும்.

இப்படியெல்லாம் சிந்தனை செய்துதான் பாரதியாரும் சிதம்பரனாரும் விபின சந்திர பாலரும் கடல்போல் ஞானம் வாய்க்கப்பெற்ற அரவிந்த யோகியும் உருவாக்கி வளர்த்து விட்ட தேசியத்தின் அடிப்படைத் தத்துவத்தை உணர்ந்து கொள்ள முயன்றிருக்கிறேன். இத்தத்துவத்தை நன்குணர்ந்தவர்கள், இதுவே தேச ஒருமைப்பாட்டிற்கு இன்றியமையாதது என்பதையும், திராவிடக் கொள்கைகள் அன்னியராலும் பிற்போக்காளராலும் கையாளப்பட்டு பிரிவினைச் சக்திகளையே ஆதரித்தன என்பதையும் மறப்பதற்கில்லை என்பது என் கருத்து.

இது எப்படியிருந்தாலும், மனோன்மணீய ஆசிரியர் ஒரு சிறந்த தமிழ் மேதை என்பதையும், அந்த மேதாவிலாசத்தில் மலர்ந்த மனோன்மணீயம் தனிச்சிறப்பு வாய்ந்த ஒரு மறு மலர்ச்சி இலககியம் என்பதையும் நான் முழு மனத்தோடு ஒப்புக் கொள்கிறேன்.

மனோன்மணீயம் வாழ்க! சுந்தரம்பிள்ளையின் புகழ் வளர்ந்தோங்குக!!

---

# 2. கம்பனில் ஆழ்வார்கள் சாயல்

சங்க காலத்தில் காதலும் வீரமும் தமிழர் பண்பாட்டை உருவாக்கி வளர்த்துள்ளன என்பது பலரும் அறிந்ததே. அன்றைய வீரத் தமிழகத்தின் உள்ளுரை உயிர் காதல்; இக்காதலும் வீரமும் பல்லவர் காலமாகிய பக்திக் காதலும் ஞான வீரமுமாகத் தளிரோடித் தழைத்தன. அதன் விளைவே ஆழ்வார்களின் பக்தி மதம்; இதுவே இந்து மதத்தின் மறு மலர்ச்சியாகி இந்தியா முழுமையும் — காஷ்மீரம் முதல் கன்யாகுமரி வரை — வியாபித்திருந்தது.

அதற்கு முன் பரவியிருந்த சமண பௌத்தக் கொள்கைகள் தருக்க வாதங்களால் நிலைநாட்டப்பெற்றன.

'குர்க்கச் சமணரும் சாணக்கியப் பேய்களும்
........................சூனிய வாதரும்'.

என்று இராமாநுச நூற்றந்தாதி கூறுவதிலிருந்து, பல்லவர் காலத்துப் பக்தி நெறியுடனும் சமண நெறியுடனும் தற்காப்புக்காகப் போரிட நேர்ந்தது என்பதோடு, வைணவர்க்குச் சைவருடனும் மோதிக் கொள்ளும் நிலையும் ஏற்பட்டது என ஊகிக்கலாம்.

சமண பௌத்தங்களிலும் பக்தி இடம் பெற்றிருந்தது.

'முன்தான் பெருமைக்கண் நின்றுன்
முடிவெய்து காறும்
நன்றே நினைந்தான் குணமே,
மொழிந்தான், தனக்கென்று

ஒன்றநும் உள்ளான், பிறர்க்கே
உறுதிக்கு உழந்தான்
அன்றே இறைவன், அவன்தாள்
சரண்ஆங்கள் அன்றே'

என்ற குண்டலகேசியின் காப்புச் செய்யுள் கூர்ந்து நோக்கத் தக்கது. இதில் புத்தனுக்கே பக்தியும் சரணுகதியும் உரியன என்பது அழுத்தமாய்க் கூறப்பட்டிருக்கிறது.

இந்தக் கூற்றை மறுப்பதுதான், இராமாநுசர் வாக்கைக் கம்பன் மொழி பெயர்த்திருக்கும் இராமாவதாரக் காப்புச் செய்யுள் :

'உலகம் யாவையும் தாம் உளவாக்கலும்,
நிலே பெறுத்கலும், நீக்கலும், நீங்கலா
அலகிலா விளையாட்டு உடையார்—அவர்
தலைவர் ; அன்னவர்க்கே சரண் ஆங்களே'

இச் செய்யுளில் கம்பன் மிகவும் அழுத்தமாகக் குண்டலகேசியின் காப்புச் செய்யுளில் புலப்படும் பௌத்தக் கொள்கையை மறுத்துள்ளான் என்பது தெளிவு. கம்பன் காலத்தில் பௌத்த மதம் பலவீனமாகத்தான் இருந்தது. எனினும் 'பலவீனமான விரோதியைப் பற்றி அலட்சியமாய் இருப்பவன், ஒரு சிறு நெருப்புப் பொறி தானே என்று அலட்சியமாய் இருப்பவனை ஒப்பவனுவான்' என்ற அறிஞன் ஸாஅதியின் கருத்தினுக்கு இணங்கக் கம்பனும் இராமானுச நூற்றந்தாதி ஆசிரியர் அமுதனுரும் நடந்துகொண்டிருக்கிறுர்கள் எனலாம்.

இதே கருத்துடன் இராமாநுசரும் அவைதிகமான பௌத்த சமண நெறிகளைக் கண்டனம் செய்துள்ளார். இவரைக் கம்பன் பின் பற்றுகிறன் என்பதற்கு,

'அறையும் ஆடரங்கும் படப் பிள்ளைகள்
தரையில் கீறிடின், தச்சரும் காய்வரோ ?'

என்ற அவையடக்கச் செய்யுட் பகுதியும் ஒரு சான்று.

திருவரங்கத்தில் சிறு பிள்ளைகள் மணலில் விளையாடிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் மணல்வீடு கட்டி அதற்கு அறையும் ஆடரங்கும் (நடனமண்டபமும்) அமைத்தனர். இதை இராமாநுசர் கண்ணுற்று அவர்களிடமிருந்தும் தமக்கு ஒரு பாடம் பாவனைத்திறன் பற்றிக் கற்றுக் கொண்ட தாகக் குருபரம்பரை வரலாறு ஒன்று தெரிவிக்கிறது. இதைக் கம்பன் கேள்வியுற்றிருக்க வேண்டும் என்பது இந்த அவையடக்கப் பகுதி செய்யுளிலிருந்து ஊகிக்கப்படும்.

உலகத்தைப் படைத்துக் காத்து நீக்கும் முத்தொழிற் பொறுப்பையும் மேற்கொண்டுள்ள பரம் பொருளுக்குச் சமண பௌத்தங்களில் இடமில்லை என்றுதான் அச் சமயிகள் சூனிய வாதர்கள் எனக் கருதப்பட்டனர்.

நம்மாழ்வார், திருஞானசம்பந்தர் முதலான தொண் டர்கள் பரம்பொருள் உண்மையை அடிப்படையாகக் கொண்டே தங்கள் நெறிகளை நிறுவியுள்ளனர். தமிழகத்தில் பக்திநெறி 'உபயகாவேரி'யாகப் பெருகிப் பொதுமக்களை வாழ்வித்துள்ளது.

இராமாநுசர் ஸ்ரீ வைஷ்ணவத்தை வளர்த்த தாய் என்றும், பெற்றதாய் சடகோபர் என்றும் வைணவர்

கருதுவர். திருவாய் மொழியின் முதற்பதிகத்திலே முதற் பாசுரத்திலேயே இறைவன் உயர்வற உயர்ந்த பண்பு நலன்களை உடையவன்; மயர்விலா மதிநலம் கம்பன் வாக்கிலே எண்ணருளி ஏழைமை துடைத்தெழு மெய்ஞ் ஞானக்கண். அருளவல்ல தேவதேவன்; அவன்பால் அடி வீழ்ந்து அடைக்கலம் புகுவதே துயர்தீரும் வழி என்பது முடிந்த முடிவாகக் கூறப்பட்டுள்ளது.

சைவர்கள் இறைவனைப் 'பிறவாயாக்கைப் பெரியோன்' என்பர். ஆனால் திருமால் 'பிறப்பில் பல்பிறவிப் பெருமான்' எனப்போற்றப் பெறுகின்றான். சாவாது பிறவாது தனி முதலாய் இருப்பவன் உலகுபடும் அருந்துயர் தீர்க்கப் பல்பிறவிகள் தாங்கி வருகின்றான். இது சைவத்தினின்று வைணவத்தைப் பிரித்துக் காட்டும் ஒரு சிறப்புக் கொள்கை. இறைவனது இத்தகைய பிறவிகளை அவதாரங்கள் என்பர்.

இந்த அவதாரங்களில் இராமனும் கண்ணனும் அதி முக்கியமானவர்கள். 'கற்பார் இராமபிரானையல்லால் மற்றும் கற்பரோ ?' என்பது நம்மாழ்வார் வாய்மொழி. இந்தக் கூற்றைப் பின்பற்றியது கம்பன் கவியுள்ளம் எனக் கருதுவது பொருந்துவதே.

'முன்னோர் மொழி பொருளேயன்றி அவர் மொழியும் பொன்னே போல்' போற்றுகின்றான் கம்பன். இவனுடைய சிந்தனைகள் தத்துவநெறியில் நம்மாழ்வாரைக் கொழு கொம்பாய்ப் பற்றிப் படர்ந்துள்ளன. மற்றப்படி, கம்பன் தத்துவசாஸ்திரி அல்லன் ; கவிஞன்தான் என்பதை நாம் ஒருபோதும் மறக்கலாகாது.

நம்மாழ்வாரைப்போல் சீடரான மதுரகவியாழ்வாரும் தத்துவ ஆராய்ச்சியில் ஈடுபட்டுத்தான் இவரைக் குருவாகக்

கொண்டிருக்க வேண்டும். இவரை 'அருமறைகள் தமிழ் செய்தார் தாளே கொண்டு துன்பற்ற மதுரகவி' என்பர் வேதாந்த தேசிகர். ஆழ்வாரின் இச் சீடரும் கவிச்சக்கர வர்த்திக்கு ஒரு வழிகாட்டியாவர். 'அன்னையாய் அத்தனாய் என்னை ஆண்டிடும்' என்ற மதுரகவியாழ்வாரின் தொடரை ஒட்டி அமைந்துள்ளது தான் சீதை அனுமனை வாழ்த்தும் பகுதியில்

'அம்மை ஆய், அப்பன் ஆய
அத்தனே! அருளின் வாழ்வே!' — என

வருவது.

'நன்னெஞ்சே! நம்பெருமான் நமக்கருள்தான் செய் வானே' என்ற நம்மாழ்வாரின் நம்பிக்கை (மகா விசுவாசம்) சீடர் மதுரகவியாழ்வாருக்கும் உரியதே. அவ்வண்ணமே இது கம்பனின் அசைக்க முடியாத நம்பிக்கையும் தான்.

தத்துவத்தின் முடிவு கண்ட சதுமறைப் புரோகிதன் என்று பாரதம் பாடிய வில்லிபுத்தூரர் போற்றும் பெரியா ரைக் கம்பன் தனக்கும் ஒரு ஞான தேசிகராகக் கொண்டுள் ளான் என்பதில் ஐயமில்லை.

'வாமனன் மண் இது' என்பது நம்மாழ்வார் வாக்கு. அப்படியிருக்க, வானமும் வையமும் வவ்வுதல் செய்த மாவலி மண்ணுலகில் இரவலனாய் வந்த வாமனனுக்கு மூன்றடி மண்ணைத் தானமாகக் கொடுக்க முற்படுவதைக் காண்கிறோம். கம்பராமாயணத்தில் வரும் வாமனன் கதை கூர்ந்து நோக்கத்தக்கது. நம்மாழ்வாரின் திருவுள்ளத்திற்கு இசையக் கம்பன் கவியுள்ளம் மாவலி கதையை உருவாக்கி உள்ளது.

இராமாநுசர் முதன் முதல் திருக்குருகூரில் அடிவைத்த போது 'இதுவோ பரமபதத்து எல்லே!' என்று வியக்கிருர். கம்பனும் அத்தகைய உணர்ச்சியோடு தன் தத்துவ சிந்தனை களுக்கு வழிதருகிற குருகூரை நோக்குகிருன் எனக் கருதலாம்.

இச் சடகோபருடைய கொள்கைகளில் தன்னுடைய சமரச உணர்ச்சிக்கும் ஆதாரம் கண்டு கொண்டான். 'முனியே! நான்முகனே! முக்கண் அப்பா!' என்று கூறும் நம்மாழ்வார் வாக்கிலே சைவ வைணவ சமரசத்திற்கு அடிப்படை கண்டுகொண்டான் அல்லவா?

நம்மாழ்வாரின் ஆராதனைப் பெருமாள் ஆதிநாதர். 'ஆதிதேவர் அவர் எம் அறிவினுக்கு அறிவரோ!' என்பது கம்பன் வாக்கு. ஆதிதேவர் என்பதற்குப் பதில் ஆழ்வார் திருநகரி ஏட்டுப் பிரதிகளில் ஆதிநாதர் என்ற பாடபேதமும் காணப்படுகிறது. நம்மாழ்வாரின் குருகூர் வழியாகச் செல்லும் தண் பொருனையைக் கம்பன் 'பொன் திணிந்த பொருநையெனும் திருநதி' எனச் சிறப்பித்துள்ளான்.

நம்மாழ்வாரின் அவயமாகிய உறுப்புக்களே மற்ற ஆழ்வார்கள் என்பர். அதனுல் இவரை அவயவி என்கிருர் கள். மற்ற எல்லா ஆழ்வார்களின் சாயல்—சொற்களும் கருத்துக்களும்—நம்மாழ்வார் என்ற சீரிய நற்சிந்தனையாள ரிடம் ஒருங்கே ஒழுங்கு பெற்றுக் காணப்படுகின்றன என்பது இந்த ஆழ்வார் வாக்கையும் மற்ற ஆழ்வார்களின் வாக்கை யும் ஒப்பிட்டுப் பார்த்தால் நன்கு புலனுகும். உதாரணமாக ஸ்ரீ வைஷ்ணவத்தின் ஆதி கவி என்று சொல்லப்படும் பொய்கையாழ்வார் பாடிய முதல் திருவந்தாதியைச் சற்று நோக்குவோம். உதாரணமாக, இவர் திருமாலைச் சிவ பெருமான் வழிபட்டதாகச் சொல்லியிருக்கிருர். இதற்கு அடுத்த பாட்டிலேயே சைவ வைணவ ஒற்றுமை கூறப்படு கிறது.

'அரன் நாரணன் நாமம் ஆன்விடைபுள் ளூர்தி
உரைநூல் மறையுறையும் கோயில்—வரைநீர்
கரும மழிப்பளிப்புக் கையதுவேல் நேமி
உருவமெரி கார்மேனி யொன்று'

திருமாலின் பரத்துவம் கூறுபவர், இந்தச் செய்யுளில் சைவவைணவ பக்திமதங்களின் ஒற்றுமையைப் புலப்படுத்து கிறார். திருமாலும் சிவபெருமானும் வானவில்லின் கரு நீலத்தையும் செந்நிறத்தையும் நினைவூட்டுவதாக ஒரு பழந் தமிழ்ப் பாட்டு இங்கே நமக்கு நினைவுக்கு வருகிறது. எல்லாச் சமயங்களும் வானவில்லின் பன்னிறங்களை நினைவூட்டுவதாக ஒரு பழந்தமிழ்ப் பாட்டு இங்கே நமக்கு நினைவுக்கு வருகிறது. எல்லாச் சமயங்களும் வானவில்லின் பன்னிறங்களை நினை வூட்டுவதாகக் கருதுவது சர்வசமய சமரச நன்நிலைக்கு ஒரு வசீகரமான நினைவுக்குறி இல்லையா ?

'அவரவர் தாந்தா மறித்தவா றேத்தி
இவரிவ ரெம்பெருமானென்று—சுவர்மிசைச்
சார்த்தியும் வைத்தும் தொழுவர் உலகளந்த
மூர்த்தியுருவே முதல்.'

என்பது பொய்கையாரின் சித்தாந்த சாரம்.

'தமர் உகந்தது எவ்வுருவம் அவ்வுருவம்தானே'

என்றும்,

'தமர் உகந்தது எப்பேர் மற்று அப்பேர்'

என்றும் கூறியுள்ள இந்த ஆழ்வார்,

'ஏற்றான்புள் ளூர்ந்தா னெயிலெரித்தான் மார்விடந்தான்
நீற்றான் நிழன்மணி வண்ணத்தான்—கூற்றொருபால்
மங்கையான் பூமகளான் வார்சடையான் நீண்முடியான்
கங்கையான் நீள்கழலான் காப்பு.'

என்றும் கூறியிருப்பதிலிருந்து, பக்தி வெள்ளம் நமது நாட்டில் இரு பேராருகப் பெருகி மக்களை வாழ்வித்தது என்பது உறுதிப்படுகிறது.

பொய்கையாரின் சைவ வைணவ சமரச உணர்வு இந்த அந்தாதியின் 98-ஆம் செய்யுளிலிலும் வலியுறுத்தப்படுகிறது.

'நிறம் வெளிது செய்து பசிதுகரிதென்று
இறையுருவம் யாமறியோம்'

என்ற 56-ஆம் செய்யுளில் இவரது சமரச உணர்வு உலகி லுள்ள எல்லா சமயங்களுக்கும் இடம் கொடுக்கிறதோ என்று கேட்கத் தோன்றுகிறது. பொய்கையாரின் சித்தாந்த சாரம் நம்மாழ்வார் வாக்கில் அதற்குரிய முழு வடிவமும் பெற்றுள்ளது. முதலாழ்வார்களில் பூதத்தாழ்வார் பேயாழ்வார் ஆகிய இருவரும் பொய்கையாரின் கருத்துக் களைத் தழுவிய இரண்டாம் திருவந்தாதியும், மூன்றும் திருவந்தாதியும் முறையே பாடியுள்ளனர்.

## மதப்பூசல்களும் திருமழிசையாழ்வாரும்

முதலாழ்வார்களின் சீடரான திருமழிசையார் காலத்தி லேயே சைவ வைணவ சமரசம் மறக்கப்பட்டுப் பூசல்களும் தோன்றின. 'அன்பின் அன்றி ஆழியானை யாவர்காண வல்லரே? என்று கூறும் இந்த ஆழ்வார்,

'அறியார் சமணர் அயர்த்தார் பவுத்தர்—
சிறியார் சிவப்பட்டார் செப்பில்.'

என்று திட்டவட்டமாக அறிவித்துள்ளார். இந்த வாக்கிலே பிரதிபலிக்கும் கால நிலை அப்பர் வாக்கிலும் சம்பந்தர் வாக்கிலும் எதிரொலிப்பதையும் காண்கிறோம்.

மற்றப்படி திருமழிசையாழ்வார் ஸ்ரீ வைணவத்திற்கும் வீர வைணவமாக— மறந்தும் புறந்தொழாமையோடு கூடிய சித்தாந்தமாக—வளரத்தக்க ஊட்டம் தந்திருக்கிறுர் எனலாம்.

'நானுன்னை யன்றி யிலேன்கண்டாய்—நாரணனே
நீயென்னை யன்றி யில்லை.'

என்ற வாக்கில் நாராயணன் பெருமையுடன் தொண்டக் குலத்தின் பெருமையும் வெளியிடப்பட்டுள்ளது.

'குலங்களாய ஓரிரண்டில் ஒன்றிலும் பிறந்திலேன்' என்று கூறியிருப்பதிலிருந்து இவர் நாற்பாற் குலத்திற்கும் அப்பாற்பட்டுள்ள அதிவருணுசிரமி என்பது ஊகிக்கப்படும். இவர் குருபரம்பரைகளில் காணும் வரலாற்றிலிருந்து கூடைமுடையும் தொழிலாளர் வகுப்பைச் சேர்ந்தவர் என்று தெரிய வருகிறது. தொழிலுக்குக் கையும், கடவுளுக்கு உள்ளமுமாக வாழ்க்கை நடத்தியவர் எனலாம். தொண்டக் குலமே தொழுகுலம் என்பதை வலியுறுத்தும் இவர், திருப்பாணுழ்வார் வரலாற்றையும் நினைவூட்டுகின்றுர்.

திருப்பாணுழ்வாரின் சாயலைக் கம்பனில் கண்டு கொள்வது மிக எளிது.

'அமலத் தொல்பெயர் ஆயிரத் தாழியான்
நிமலப் பாதம் நினைவில் இருந்தஅக்
கமலக் கண்ணனை.'

சூர்ப்பணகை கையால் சுட்டிக் காட்டினுள்.

அமலனுதி பிரானின் முதற்பாட்டிலேயே அமலன், விமலன், நிமலன், நிர்மலன், நீதிவாணவன் என்று இறைவன் குறிக்கப் பெறுகின்றுன். அமலன் என்றுல் தான் பரிசுத்த

மாக இருப்பது மட்டுமில்லை; தன்னைச் சார்ந்தவர்களையும் தூயவராக்குபவன் என்பது என்று வியாக்கியான சக்கரவர்த்தி பெரியவாச்சன் பிள்ளை விளக்கம் தந்துள்ளார்.

இக் கருத்தை அரண் செய்வதுதான், 'பாண் பெருமாள் அருள் செய்த பாடல் பத்தும் பழமறையின் பொருள் என்று பரவுமின்கள்' என்ற வேதாந்த தேசிகர் கூற்றும், இந்தப் பிரபந்தத்தின் ஒன்பதாம் செய்யுளில்

'நீலமேனியையயோ நிறை கொண்டதென் நெஞ்சினையே!'
என்ற நான்காம் அடியும்,

'ஐயோ! இவன் வடிவென்பதோர்
அழியா அழகுடையான்'
என்ற கம்பன் வாக்கோடு ஒப்பிட்டு நோக்கத்தக்கது.

திருப்பாணர் பதிகத்தில் எட்டாவது செய்யுளில்,
'கரிய வாகிப்புடைபரந்து மிளிர்ந்து
செவ்வரியோடி—நீண்டவப்
பெரிய வாய கண்கள்'
என்று கண்ணழகு வருணிக்கப்படுகிறது. இந்த வருணனை,

'சேணுற நீண்டு, மீண்டு,
செவ்அரி சிதறி, வெவ்வேறு
ஏண்உற மிளிர்ந்து, நாறு
விதம் புரண்டு, இரண்டுவாட்கண்'
என்று கம்பன் சூர்ப்பணகைப் படலத்தில் வருவதை நினைவூட்டுகிறது.

திருப்பாணாழ்வாரை வேதாந்த தேசிகர் நம் 'பாண நாதன்' என்று சிறப்பித்துப் பேசுகிறார். முனிவாகனர் என்றும் இந்த ஆழ்வார்க்கு ஒரு பெயருண்டு. 'முனி ஏறித்

கனிபுகுந்து பாட்டினால் கண்டு வாழும் பாணர்தாள் பரவி னோமே' என்று திருமலை நம்பிகள் தம் தனியனில் கூறுவதை யும் பாருங்கள்.

## சித்தாந்தத் தெளிவும் ஆழமும்

கடல் பேராழமாயிருந்தும் நீர்த்தெளிவினாலே தரை அப்படியே தோன்றக் கூடும்; அத்தகைய சித்தாந்தத் தெளிவும் ஆழமும் காணப்படுகின்றன தொண்டரடிப் பொடியாழ்வாரின் வாக்கிலே. இவர் அருளிய பிரபந்தங்கள் இரண்டு : ஒன்று திருமாலை, மற்றது திருப்பள்ளியெழுச்சி. ஸ்ரீ வைஷ்ணவத்தின் சில சிறப்பியல்புகளைத் தொண்டரடிப் பொடியாழ்வாரின் திருமாலையில் காண்கிறோம். எளிமையும் இனிமையும் ஆற்றலும் வாய்ந்த தமிழில் அவற்றை விளங்க வைத்திருக்கிறார். இறைவன் திருநாமம் இறைவனைக் காட்டிலும் நமக்கு உதவுகிறதாம்.

இறைவனது வடிவென்பதோர் அழியா அழகைத்

தொண்டரடிப் பொடியாழ்வார் பின் வருமாறு பாடுகிறார்;

'பச்சைமா மலைபோல் மேனி
பவளவாய் கமலச் செங்கண்
அச்சுதா! அமரரேறே! ஆயர்தம்
கொழுந்தே! யென்னும்
இச்சுவை தவிர யான்போய்
இந்திர லோகமாளும்
அச்சுவை பெறினும் வேண்டேன்
அரங்கமா நகருளானே!'

இப்பாட்டை அனுபவித்த கவி இதயத்தை நாம் சுக்ரீவன் முதல் முதல் கண்ட இராமன் காட்சியாகக் காண்கிறோம்.

'கண்டனன் என்ப மன்றே
கதிரவன் சிறுவன், காமர்
குண்டலம் துறந்த கோல
வதனமும், குளிர்க்கும் கண்ணும்,
புண்டரி கங்கள் பூத்துப்
புயல்குழீஇப் பொலிந்த திங்கள்
மண்டலம் உதயம் செய்த
மரகதக் கிரி அனையை.'

ஆழ்வார் 'ஆதரம் பெருகவைத்த அழக'னுக அரங்கனை முன்னிலைப் படுத்திப் பாடியுள்ளார். கம்பனுக்கு அரங்கன், கண்ணன் எல்லாம் இராமன்தான். இந்த ஆழ்வாருக்குக் காவிரி கங்கையினும் புனிதமானது. காவிரிக் காதலைக் கம்பராமாயணத்திலும் காண்கிறோம்.

சாதி வேற்றுமை சிறிதும் பாராட்டாது தொண்டர் குலம் தனிச் சிறப்புடன் திகழ்கிறது என்ற பெருங்கொள்கை யை இவர் இரண்டு பாடல்களில் வெளியிட்டுள்ளார். திரு மாலையில் 42, 43-ஆம் பாடல்களே இவை — இழிகுலத்த வராயினும் மெய்யடியார்களைத் தொழ வேண்டும். அவர்களுக்கும் சமயஞானம் உரியது என்று அதைப் புகட்ட வேண்டும் எனக் கூறியதோடு, ஞானிகளாயிருந்தால் அவர் களிடம் ஞானம் பெற்றுக் கொள்ளலாம் என்பதும் தொண்ட ரடிப் பொடிகளின் கருத்து.

இதைக் காட்டிலும் தொண்டர் பெருமையை உணர்த்து வது பின் வரும் தொண்டரடிப் பொடிகளின் பாட்டு:

'அமரவோ ரங்க மாறும்
வேத மோர் நான்கு மோதித்

தமர்களில் தலைவராய
சாதியந் தணர்களேனும்—
நுமர்களைப் பழிப்பராகில்
நொடிப்பதோரளவில் ஆங்கே
அவர்கள்தாம் புலையர் போலும்
அரங்கமா நகருளானே !

இதை மேல் வரிச்சட்டமாகக் கொண்டு கவிச் சக்கர வர்த்தி,

'நீதியால் வந்ததொரு நெடுந்
தரும நெறி அல்லால்
சாதியால் வந்த சிறுநெறி
அறியான், என் தம்பி ;
ஆதியாய் ! உனை அடைந்தான் ;
அரசர் உருக்கொண்டு அமைந்த
வேதியா ! இன்னம் உனக்கு
அடைக்கலம் யான் வேண்டினனே.'

என்ற பாட்டை அமைத்திருப்பது போலத் தோன்றுகிறது.

பிற்காலச் சித்தாந்தம் :

திருமங்கையாழ்வாரை நம்மாழ்வாரின் தமிழ் வேதத்திற்கு ஆறங்கம் கூற அவதரித்தவர் எனக் கூறுவது உண்டு. நம்மாழ்வார் வகுள பூஷண நாயகியாகத் தம்மைப் பாவித்துக் கொண்டு இறைவனைக் காதலிக்கிறார் என்றால், திருமங்கையாழ்வார் பரகால நாயகியாகக் கடவுளைக் காதலிக்கின்றார். இந்த ஆழ்வாரைப் பின்பற்றியே குகன் என்ற பாத்திரப் படைப்பை இதிகாச உலகில் ஒரு அற்புதமாகச் செய்து முடித்திருக்கின்றான் கம்பன்.

குகனைத் தன் ஐந்தாம் சகோதரனுகக் கொண்ட இராமனது மனநிலையை முற்றும் புரிந்து கொண்ட நிலையில் சிறையிருந்த சீதை பின் வருமாறு இந்த உறவுபற்றி நினைப்பதாக ஒரு பாட்டு.

'ஆழநீர்க் கங்கை அம்பி கடாவிய
ஏழை வேடனுக்கு, "எம்பி நின் தம்பி ; நீ
தோழன் ; மங்கை கொழுந்தி" எனச் சொன்ன
வாழி நண்பினை உன்னி மயங்குவாள்.'

இது திருமங்கையாரின் பெரிய திருமொழிப் பாட்டின் எதிரொலிதான் :

'ஏழை யேதலன் கீழ்மகனென்னுது
இரங்கி மற்றவற் கின்னருள் சுரந்து,
மாழை மான்மட நோக்கியுன் தோழியும்பி
யெம்பி யென்றெழிந்திலை உகந்து
தோழன் நீயெனக்கிங்கொழியென்ற
சொற்கள் வந்தடியேன் மனத்திருந்திட,
ஆழிவண்ணா ! நின்னடியிணை அடைந்தேன்
அணிபொழில் திருவரங்கத் தம்மானே'

கம்பன் வாழ்ந்த திருவழுந்தூரைத் திருமங்கையாழ்வார் பாடியிருக்கிருர். அனல் ஓம்பும் மறையாளர் குறித்தும், அவ்வூர் பொழில் வளம் குறித்தும், ஆமருவியப்பன் என்ற திருப்பெயருடைய பெருமாளின் அருள்வளம் குறித்தும் பாடியுள்ளார். கம்பன் வழிபட்ட தளப் பெருமாள் ஆமருவியப்பன்தான். அந்தக் கோயிலில் கம்பனுக்கும் அவன் மனைவிக்கும் கற்சிலைகள் நெடுநாளாக உள்ளன. அச்சிலைகளுக்கு அர்ச்சகர் ஆராதனமும் உண்டு. அச்சிலைகளுக்கு எதிரே கம்பராமாயணக் காலட்சேபங்களும் நடை

பெறுவதுண்டு. உள்ளே பெருமாள் சந்நிதியில் பிரகலாத னும் காட்சி அளிப்பதைக் காண்கிறோம். இது கம்பன் யுத்த காண்டத்திலே இரணியன் வதைப் படலத்தில் கூறப்படும் பிரகலாதன் கதையை நினைவூட்டுகிறது.

திருவழுந்தூரை அழுந்தை என்றும் சொல்வதுண்டு "........அழுந்தையில் மன்னிநின்ற அங்கமலக் கண்ணனை அடியேன் கண்டு கொண்டேனே" என்று திருமங்கை மன்னன் பாடியுள்ளார்.

'அடையார் தென்னிலங் கையழித் தானை அணியழுந்தூர்
உடையானை அடியே னடைந்துய்ந்து போனேனே'

திருவழுந்தூரில் வீதி தோறும் நான்மறை கடல் போல் முழங்குவதாகவும் கூறுகிறார். இப் பெருமானை 'அரனே ஆதிவராகமும் ஆனாய்! என்று சைவ வைணவ சமரசம் தோன்றப் பாடியிருப்பதையும் காண்கிறோம். 'வேள்வி களும் கேள்விகளும் பயிலும் செல்வத்து அணியழுந்தூர்' என்றும் பாடியிருக்கிறார்.

## குலசேகராழ்வாரும் கம்பனும்

குலசேகராழ்வார் அருளிச் செய்த பெருமாள் திருமொழி யின் முதற் பாட்டில் பொருளும் சொல்லும் கூடக் கம்பனில் எதிரொலிப்பதைக் காண்கிறோம்.

'இருளிரியச் சுடர்மணிகளிமைக்கும் நெற்றி
யினத்துத்தி யணிபணமா யிரங்களார்ந்த
அரவரசப் பெருஞ்சோதி யனந்த னென்னும்
அணிவிளக்கு முயர்வெள்ளை யணையை மேவித்

திருவரங்கப் பெருநகருள் தெண்ணீர்ப் பொன்னி
திரைக் கையா லடிவருடப் பள்ளி கொள்ளும்
கருமணியைக் கோமளத்தைக் கண்டு கொண்டென்
கண்ணிணைகள் என்றுகொலோ களிக்கும் நாளே?'

என்ற பாட்டுடன் மிதிலைக் காட்சிப் படலத்தில் வரும்,

'அல்ஆழிக் கரை கண்டான் ஆயிரவாய்
மணி விளக்கம் அழலும் சேக்கைத்
தொல்ஆழித் துயிலாதே, துயர் ஆழி
நெடுங் கடலுள் துயில்கின்றானே.'

என்னும் கம்பன் பாட்டை ஒப்பிட்டுப் பார்க்கலாம்.

குலசேகராழ்வாரின் இராமபக்தி ஒரு தனிச் சிறப்பு வாய்ந்தது. செவியாலும் கண்ணாலும் வால்மீகி ராமாயண இன்னமுதைப் பருகியவர் இவர். இராமனுக்குத் தாலாட்டும் பாடியுள்ளார்.

'அங்காண்டு மதில்புடை சூழ் அயோத்தி'

என்று தொடங்கும் பெருமாள் திருமொழிப் பதிகத்தைப் பாராயணம் செய்திருப்பவர்கள் கம்பராமாயண காலட்சேபங்கள் கேட்கும் போது, அங்கே கண்குளிரக் கண்ட இராமபிரானைத்தான் இங்கும் காண்கிறோம் என்ற அனுபவம் பெறுவார்கள்.

## பெரியாழ்வாரும் ஆண்டாளும் காட்டிய வழி

இந்த ஆழ்வாரும் இவர் திருமகளும் கண்ணனையே இஷ்ட தெய்வமாக வழிபட்டவர்கள். எனினும் இவர்

களுக்குக் கண்ணன் இராமனுகக் காட்சியளிப்பதையும் காண்கிருேம். சீதைக்கு அனுமான் தெரிவித்த அடையாளம் குறித்துப் பெரியாழ்வாரும் ஒரு பதிகம் அருளிச் செய்துள் ளார். இப்பதிகத்திலே கூறப்படும் அடையாளங்களைக் கம்பராமாயணத்தில் அனுமான் கூறும் அடையாளங்களோடு ஒப்பிட்டுப் பார்க்கலாம். குகனேடு கொண்ட தோழமை யைச் 'சீரணிந்த தோழமை' என்று கூறும் இப்பெரியாரை யும் திருமங்கையாழ்வாருக்கு அடுத்த படியாக இராம— குக நட்பிற்கு ஒரு வழிகாட்டியாகக் கருதலாம்.

'வில் இறுத்தான் மோதிரம் கண்டு...................... உச்சிமேல் வைத்துக் கொண்டு உகந்தனளால்' என்ற இந்த ஆழ்வார் வாக்கும் கவனிக்கத்தக்கது.

சுந்தர காண்டத்திலே சீதையின் தனிமையுரைக்கு முன்னுரையாகக் கம்பன் அரக்கிமார் உறங்கியதைக் குறிப்பிடும்போது அவர்கள் இயற்கையாக உறங்கவில்லை என்றும் அனுமான் மந்திரத்தால் (விஞ்சைவினையால்) உறங்கினர் என்று குறிப்பிடுகிருன் அல்லவா? இந்த மாறுதலைக் கம்பன் செய்துகொண்டதற்கு ஆண்டாளே வழி காட்டியவள்.

'பெய்யுமாமழை போல் வண்ணு' என்ற ஆண்டாளின் வாக்கை 'மழைக் குன்றம் அனையான்' என்ற கம்பன் வாக்கு நினைவூட்டுகிறது.

கம்பன் ஒவ்வொரு இடத்திலும் ஓர் அகப்பை அள்ளிக் கொண்டான் என்று வேடிக்கையாகக் கூறும் பண்டிதர்கள் உண்டு. ஆழ்வார்கள் தென்தமிழிலிருந்து இவன் அள்ளிக் கொண்ட அகப்பைகள் பல. 'ஆதிமூலமே!' என்று கஜேந்திரன் அழைக்கத் திருமால் வந்து காத்த புராணக்

கதையை ஆழ்வார் வாக்கிலும் காண்கிறோம், கம்பன் வாக்கிலும் காண்கிறோம்.

ஆழ்வார்களின் தோத்திரங்களைப் பின்பற்றி அமைந்துள்ளன கம்பராமாயணத்தில் வரும் தோத்திரப் பாடல்கள். சுருங்கச் சொன்னால் ஆழ்வார்களுடைய மணிவண்ணன் கம்பனுடைய இரவிகுல மாமணியுந்தான். ஏன், தொண்டரடிப் பொடியாழ்வாரின் நகைச் சுவையும் கம்பனுக்கு வழிகாட்டியது என்றே சொல்லலாம்.

கம்பராமாயணத்தில் சிவநேசச் செல்வர்களின் சாயையும் காணப்படுகிறது என்பது உண்மையே. எனினும் இந்தச் சாயை ஆழ்வார்களின் சாயலைப் போல் அவ்வளவு நிறம் பெற்றிருப்பதாகத் தோன்றவில்லை. இது ஒரு நிழல் போலவும், ஆழ்வார்களின் சாயல் நிழல் தரும் நுணுக்கமான மேனி போலவும் என் உள்ளத்தில் பதிந்துள்ளன. ஆழ்வார்—நாயன்மார்களின் திருப்பாடல்களையும் கம்பராமாயணப் பாடல்களையும் தொடர்ந்து நீண்டகாலமாக ஓதி ஓதி உணர்ந்துவந்த என் அனுபவம் இது.

சாயைக்கு நிழல் என்ற பொருளுடன் புகழ் என்ற ஒரு பொருளும் உண்டு. சாயல் என்பது சாய்வு, இணைப்பு, நுணுக்கம், அழகு, நிறம், மேனி, ஒப்பு, சார்பு, மேம்பாடு என்றெல்லாம் பொருள்படக் கூடியது. கம்பராமாயணத்தில் ஆழ்வார்களின் அருளிச் செயலிலுள்ள பொருளையும், மொழிகளையும் கூட, நுணுக்கமாகவும் அழகாகவும் கண்டு களிக்கிறோம்.

## 3. வள்ளுவரும் சாக்ரடீசும்

பழைய காலத்திலே கிரேக்க நாட்டில் ஒருவர் இருந்தார். அவர் எதையும் தாம் அறிந்து விட்டதாகக் கூறுவதில்லை. 'நான் அறியேன், நான் அறியேன்' என்று சொல்லிக் கொண்டேயிருந்தார். அதே காலத்தில் அந்த நாட்டில் தத்துவ அறிஞர் பலர், 'நாங்கள் அறிவோம், நாங்கள் அறிந்திருக்கிறோம்' என்றே சொல்லிக் கொண்டிருந்தார்கள். அந்த நிலையில் 'அக்கால உலகில் சிறந்த அறிவாளி யார் ?' என்ற ஒரு கேள்வி மக்கள் இடையே எழுந்தது.

கருத்து வேற்றுமைகள் ஏற்பட்டதால் எவனும் ஒருவரை 'இவரே மிகச் சிறந்த அறிவாளி' என்று சுட்டிக் காட்டவோ, குறிப்பிடவோ இயலவில்லை கடைசியாக, இது குறித்துத் தெய்வத்திடம் முறையிட்டுக் கொள்ள வேண்டியதுதான் என்று பலருக்கும் தோன்றியது.

கிரேக்க நாட்டு மக்கள் பல தெய்வங்களை வழிபட்டு வந்தார்கள். தெய்வ வெறி பெற்றுக் குறி சொல்லுவோரும் அந்நாட்டில் உண்டு. 'டெல்பி' என்ற இடத்திலுள்ள தெய்வம் ஒரு சிறந்த தெய்வமாக நாட்டினரால் போற்றப் பட்டது. அந்தத் தெய்வத்தின் பிரதிநிதியாகி ஆவேசத் தால் குறிசொன்னவர், 'எவர் தம்மைக் குறித்து' 'அறியேன், அறியேன்' என்று சொல்லிக் கொண்டிருந்தாரோ அவரையே மிகச் சிறந்த அறிவாளி என்று குறிப்பிட்டார். 'அறிந்தோம், அறிந்தோம்' என்று சொல்லிக் கொண்டிருந் தவர்கள் எவரையும் அறிவாளி என்று அந்தத் தெய்வப் பிரதிநிதி ஒப்புக் கொள்ளவில்லை.

'தெய்வம் பொய் சொல்லுமா?' என்று நண்பர்கள் சாக்ரடீசையே கேட்டதாகக் கருதலாம். 'தெய்வமும் பொய் சொல்லாது ; நானும் பொய் சொல்லவில்லை!' என்று சாக்கரடீஸ் பதில் சொல்லியிருக்கக் கூடும். இது எப்படி? சற்று ஆலோசித்துப் பாருங்கள். ''நான் என் அறியாமையை அறிந்து கொண்டிருக்கிறேன் — அதாவது நான் அறியேன் என்பதை. மற்றவர்களோ தங்கள் அறியாமையையும் அறிந்து கொள்ளவில்லை!'' என்று சாக்ரடீஸ் நண்பர்களிடம் பதில் சொன்னார் எனலாம்.

சுருங்கச் சொல்லும் போது, அறியாமையை அறிந்தவனே அறிவாளி என்பது சாக்ரடீஸின் கருத்து. இந்த அறிவு தமக்கு இருந்ததால்தான் தெய்வம் தம்மை 'மக்களிடையே பேரறிவாளர்' என்று மதித்தது என்பது சாக்ரடீஸின் கருத்தாகும்.

**டெல்பி** என்ற இடத்தில் கிரேக்கர் சூரிய பகவானுக்கு ஒரு கோயில் அமைத்திருந்தனர்; சூரியனை அவர்கள் **அப்போலோ** என்ற பெயரால் வழிபட்டனர். ஒரு பெண்ணின் மேல் அந்தச் சூரிய தெய்வத்தின் சமநதம் வந்ததாக அவர்கள் நம்பினார்கள். அந்த ஆவேச காலத்தில் யாரேனும் கேள்வி கேட்கலாம்; அதற்குத் தெய்வம் பதில் சொல்லும் ஆவேசக்காரி வாயிலாக, அவள் கூறும் விடை ஒரு தொடர்ச்சி இல்லாமல் இருக்கும். அந்தப் பேச்சைக் கேட்பவர்கள் தங்கள் அறிவுக்கும் மனநிலைக்கும் தக்கவாறு புரிந்து கொள்வார்கள்.

அந்தத் தெய்வத்திடம் முரட்டுத் துணிவுள்ள ஒருவன் போய், 'உலகத்தில் சிறந்த அறிவாளன் யார்?' என்று கேட்டு விட்டான். 'சாக்ரடீஸை விடச் சிறந்த அறிவாளி வேறு எவருமே இல்லை', என்று தெய்வம் தெளிவாகச்

சொல்லிவிட்டது என்ற இந்தக் கதையைப் பிளேட்டோ (Plato) என்ற தத்துவப் பேரறிஞர் கூறியுள்ளார்.

தமக்கு எவ்வளவோ தெரிந்திருந்தும் 'தெரியாது' என்று சாக்ரடீஸ் சொன்னார்; எண்ணினார். போலி அறிவாளிகளோ தாங்கள் அறியாதவர்களாயிருந்த போதிலும் 'நமக்குத் தெரியும், எல்லாம் தெரியும்!' என்று எண்ணினார்கள்; பிறரிடமும் . சொன்னார்கள். அறியாதவர் என்று சொல்லிக் கொண்டவரைத் தெய்வம் அறிவாளி என்று சொன்னது ஒரு புதிர் போலக் காணப்படுவது இயற்கை. எனினும் இப் புதிருக்குப் புதை பொருள் உண்டு. இந்தப் புதைபொருளைச் சாக்ரடீஸே சுட்டிக் காட்டியிருக்கிறார்.

'என்னைவிடச் சிறந்த அறிவாளி யாரையாவது, நான் தேடிக் கண்டிபிடிக்க விரும்புகிறேன்' என்று தேடித் திரிந்தாராம் சாக்ரடீஸ். அப்படிக் கண்டுபிடித்து விட்டால் நான் டெல்பித் தெய்வத்திடம் போவேன், போய், ''அதோ என்னைவிடச் சிறந்த அறிவாளி இருக்கிறாரே; அப்படியிருக்க, ஓ தெய்வமே! என்னை எல்லாரையும் விட அறிவாளி என்றாயே'' என்று நேரில் கேட்டு விடுவேன்' என்று சாக்ரடீஸ் தமக்குத் தாமே சொல்லிக் கொண்டாராம்.

முதன்முதல் அரசியல் வாதிகளிடம் சென்றார் சாக்ரடீஸ். கடைசியாகத் தத்துவவாதிகளிடமும் போனார்; எல்லாரும் எல்லாம் தெரிந்ததாகப் பாசாங்கு செய்வதாகவே கண்டார். அவர்களைவிட நான் சிறந்தவனே; தெய்வம் சொன்னது. பொய்யன்று' என்று முடிவு கட்டினார்.

இப்படிக் கண்டுபிடித்தவருக்குப் பகைவர்கள் அதிகரித்து விட்டார்கள். இவர்மேல் கோபம் கொண்டவர்களின்

தொகையும் பெருகிவிட்டது. இவர்மீது வீணான பழிகளைச் சுமத்த முற்பட்டவர்களும் உண்டு. எனினும், இவர் அறிவு பற்றிய ஒரு மகத்தான உண்மையைக் கண்டுபிடித்து விட்டார். அதாவது, அறியாமையை அறிவிப்பதுதான் அறிவு! இந்த அறிவு தம்மிடம் இருப்பதாக சாக்ரடீஸ் தெளிந்தார்.

அறியுந்தோறும் அறியுந்தோறும் அறியாமையையே அறிஞன் காண்கிறான் என்கிறார் திருவள்ளுவரும். இந்தக் கருத்தை வெளியிடுகிறது கீழ்க்கண்ட குறளின் சொற்றொடர்.

'அறிதொறும் அறியாமை கண்டற்றால்'

அறிவால் பொருள்களை அறிகிறோம். நுண்ணறிவால் பொருள்களை மேலும் அறிகிறோம். நூல்களில் பிறர் அறிவைக் கண்டு அந்த அறிவையும் பயன்படுத்திக் கொண்டு பொருள்களை அறிகிறோம். நூலும் நுண்ணறிவும் ஒன்றுக்கொன்று துணையாகும். நூலறிவு நுண்ணறிவைத் தூண்டும். நுண்ணறிவு நூலறிவை இனிது விளக்கிக் கொள்ளும். 'இந்த இருவகை அறிவுகொண்டு பொருள்களை அறிய அறிய நாம் நம்முடைய அறிவையா காண்கிறோம்? 'கற்றது கைம்மண் அளவு, கல்லாதது உலகளவு' என்ற உண்மையைத் தானே கண்டுபிடிக்கிறோம் என்பது திருவள்ளுவரின் மனநிலை. இந்த மனநிலையைத்தான் 'அறிதொறும் அறியாமை கண்டற்றால்' என்று ஒரு சூத்திரம் போல் குறள் வாக்கிலே காண்கிறோம்.

'அறிவிற்கு எல்லையின்மையால், மேன் மேல் அறிய அறிய முன்னை அறிவு அறியாமையாய் முடியுமாறு போல' என்பது பரிமேலழகரின் உரை. குறள் ஆசிரியரின் கருத்தை இந்த உரையாசிரியர் தெள்ளத் தேறித் தெளிந்து வெளியிடு

கிறார். திருவள்ளுவர் சுருங்கக் கூறி விளங்க வைத்திருப்பதைப் பரிமேலழகரும் சுருக்கமாகவும் நுட்பமாகவும் விளக்கியுள்ளார். நாம் மேலும் மேலும் அறிய அறியப் பழைய அறிவெல்லாம் எவ்வளவு குறைவானது என்று கூடத் தோன்றவில்லையாம். அந்த அறிவெல்லாம் அறிவு என்று மதிப்பிடவும் தகுதியுள்ளதன்று என்கிறார். 'முன்னை அறிவு அறியாமையாய் முடியும்' என்ற உரையாசிரியரின் விளக்கத்திலே திருவள்ளுவரை நாம் உள்ளபடியே கண்டு கொள்கிறோம்.

இந்த உரையிலும், 'அறிதோறு அறியாமை கண்டற்றால்' என்ற குறளிலும் திருவள்ளுவரை நாம் ஒரு சாக்ரடீஸாகக் கண்டுபிடிக்கிறோம். அந்தக் கிரேக்க ஞானியை இந்தத் தமிழ்ப் பேரறிவாளர் எவ்வளவு அதிசயமாக நமக்கு இங்கே நினைவூட்டி விடுகிறார் பாருங்கள்!

சாக்ரடீஸ் மகான் கிரேக்கர் மாட்சி உன்னத நிலையிலிருந்த காலத்தினிடையே வாழ்ந்து வந்தார் என்று வரலாறு தெரிவிக்கிறது. திருவள்ளுவரும் நமது நாகரிகமும், பண்பாடும் உன்னத நிலையிலிருந்த காலத்தில் வாழ்ந்தவராகக் கருதப்படலாம். இவர் தமிழிலக்கியத்தின் பொன்யுகம் என்று கருதப்படும் சங்க காலத்தை ஒட்டி வாழ்ந்தார் என்று ஊகிக்கலாம்.

சங்ககாலத்தின் இறுதியில், கி.பி. ஐந்தாம் நூற்றாண்டை ஒட்டி நம் திருவள்ளுவர் வாழ்ந்திருக்கக் கூடும் என்று சில ஆராய்ச்சிக்காரர் கருதுவர். இக்காலத்திற்கு முற்பட்டவர் இவர் என்று துணிவோரும் உண்டு. சாக்ரடீஸ் என்ற கிரேக்க அறிஞரோ, கிறிஸ்து பிறப்பதற்கு முன்பே கி. மு. ஐந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் என்று வரலாறு திட்டமாகத் தெரிவிக்கிறது.

திருவள்ளுவருக்கு முற்பட்டவர் சாக்ரடீஸ் என்பதை எந்த ஆராய்ச்சியாளரும் மறுப்பதற்கில்லை. கிரேக்க நாட்டின் தலைநகரான ஏதென்ஸ் நகரத்தில் வாழ்ந்தவர் சாக்ரடீஸ். திருவள்ளுவரோ மயிலாப்பூர்வாசி, மதுரை வாசி, என்று சிலர் ஐயங்கொண்டு வாதித்த போதிலும், மயிலைவாசி இவர் என்பதே பல அறிஞர்கள் ஒருமுகமாய்க் கூறும் கருத்தாகும்.

மயிலை இன்று சென்னை மாநகரின் ஒரு பகுதி; அன்றோ தமிழ் நாகரிகத்தின் ஒரு வளர்ப்புப் பண்ணையான திருநகரம்! அந்த மயிலையின் பகுதிதான் அக்காலத் திருவல்லிக்கேணி. அத்திருவல்லிக் கேணியைக் காட்டிலும் சாக்ரடீஸ் காலத்து ஏதென்ஸ் நகரம் பெரிது என்று சொல்ல முடியாது.

திருவள்ளுவரும் சாக்ரடீஸும் அறிவுக்குத் தந்திருக்கும் விளக்கம் போல் வேறு எவரும் தந்திருக்கவில்லை என்றே சொல்ல வேண்டும்.

திருவள்ளுவருக்கு உலக மக்கள் அனைவருமே சகோதரர் ஆவர்; 'யாதும் ஊரே, யாவரும் கேளிர் (உறவினர்)' என்ற சங்ககாலப் பெருங் கொள்கையில் ஊறிக் கிடந்தது திருவள்ளுவரின் உள்ளம்.

'யாதானும் நாடு ஆமால்! ஊர் ஆமால்! என் ஒருவன்
சாந்துணையும் கல்லாத வாறு'.

என்ற குறளைத்தான் பாருங்கள். கற்றவனுக்கு எந்த நாடும் சொந்த நாடு, எந்த ஊரும் சொந்த ஊர் என்று திருவள்ளுவர் கூறுவதைக் கூர்ந்து நோக்குங்கள். உயிர் மக்களைச் சகோதரராகத் தழுவிக் கொள்வோரே கற்றவர், இவர்களே அறிவாளிகள் என்ற கருத்தை இந்தக் குறளின் உயிர்நெறியாகக் கண்டு களிக்கிறோம்.

கிரேக்கர்களைப் போல் பழைய தமிழர்கள் வரலாற்றுத் துறையில் ஆர்வம் கொண்டிருக்கவில்லை ஆனால் திருவள்ளு வரைத் திருக்குறளிலே காணமுடிகிறது. வள்ளுவனாின் அகவாழ்வுதானே திருக்குறளாகக் கனிந்திருக்கிறது. இத் திருக்குறளிலிருந்து திருவள்ளுவரின் அகவாழ்வுடன் புற வாழ்வு குறித்த சில ஊகங்களையும் நாம் செய்து பார்க்கலாம். அப்போது திருவள்ளுவரைத் தமிழகத்தின் சாக்ரடீஸ் என்று கூறுவதுடன், கிரேக்க மகானை மேலைநாடுகளின் திருவள்ளுவர் என்று சுட்டிக் காட்டலாமே என்பது போன்ற மனத்துணிவும் நமக்கு ஏற்படும்.

சாக்ரடீஸ் மகானுக்கும் இல்லாத ஓர் அரும் பெருஞ் சிறப்பு நம் தமிழகத்தின் சாக்ரடீஸுக்கு இருக்கிறது என்ப தைத் தமிழர்களாகிய நாம் பெருமிதத்துடன் சுட்டிக் காட்டலாம். இதன் இரகசியம் திருக்குறளின் பெயரிலேயே புதைந்து கிடக்கிறது. வள்ளுவரின் நடையில் சொற்கள் குறுகிப் பொருள் நிறைந்திருக்கிறது என்பதைத் திருக் குறள் என்ற பெயரே உணர்த்தி விடுகிறதல்லவா ?

சொற்செட்டும் பொருட் பெருக்கமும் இக்குறள் நடை யின் தனிச் சிறப்பியல்பு. சூத்திரம் போல் திட்ப நுட்ப மாகவும், ஒரு சிறந்த சொற்பொழிவு போல் அவ்வளவு தெளிவாகவும் தம் கருத்துக்களை அமைத்திருக்கிறார் திருவள்ளுவர். திருநெடுமால் குறளாக வந்து உலகத்தை அளந்தது போல், திருக்குறளும் கருத்துவகை அளந்து காட்டு கிறது—இல்லையா ?

சாக்ரடீஸ் வறுமையில் வாழ்ந்தார் என்று தெரிய வரு கிறது. அவரது வாழ்க்கையில் ஞான வளம்தான் இருந்தது. திருவள்ளுவரோ ஓரளவு வசதியுடன் இல்லறம் நடத்துவதற் குரிய வாய்ப்பைப் பெற்றிருந்தார் என்று ஊகிக்கலாம்.

அடுத்த வேளைச்சாப்பாடு எங்கே கிடைக்கும் என்ற நிச்சயம் இல்லாமலே அலைந்து திரிந்து அறிவைப் பரப்பிய வண்ணமிருந்தார் சாக்ரடீஸ். வள்ளுவரோ அதிகமாய்ப் பொருள் ஈட்டாமலே தொழில் செய்து குடும்பத்தைக் காப்பாற்றிக் கொண்டே தம் தனிப் பெருந்தொழிலாகிய திருக்குறள் அமைப்பிலே ஈடுபடலானார் என்று கூறலாம். 'மிகு பொருள் வெஃகாமை' தான் இவருக்குக் குறியாகி வாழ்க்கை நெறிக்கு வழிகாட்டியிருக்கக் கூடும்.

சாக்ரடீஸின் கருத்து வளத்தையும் நிகரிலாச் சொல் ஆற்றலையும் நுண்மாண்நுழைபுலத் திறனையும் திருக்குறளில் காண்கிறோம். 'சாக்ரடீஸின் உயர்ந்த கொள்கைகளுக்கு எதிர்ப்பு ஏற்பட்டதாக வரலாறு சொல்லுகிறது. அத்தகைய எதிர்ப்பு நமது நாட்டில் வள்ளுவருக்கு எந்த நாளிலும் ஏற்படவில்லை என்று துணியலாம். சாக்ரடீஸின் கொள்கைகளைச் செல்வர்கள் வெறுத்தார்கள்; மூடப் பழக்க வழக்கங்களில் மூழ்ந்து நின்றவர்களும் வெறுத்து ஒதுக்கினார்கள். 'சமய உண்மைகளை மறுக்கிறாரே இவர்!' என்றார்கள்; 'இளமை உள்ளத்தைப் புதுமைக் கொள்கைகளால் பகட்டி மயக்குகிறாரே!' என்றார்கள்; 'தண்டனை விதிக்க வேண்டும்—ஆம் மரணதண்டனை!' என்று கூச்சலிட்டார்கள். இத்தகைய எதிர்ப்புகளில் ஒன்றுமே திருவள்ளுவருக்கு ஏற்படவில்லை என்று நம்பலாம். சமயவாதிகளும் இவர் காட்டிய நீரில் நன்னெறிக் கொள்கைகளை மனமுவந்து வரவேற்றார்கள்; சமயக் கணக்கர் தங்கள் சமயக் கொள்கைகளுக்குத் திருக்குறளை உயிர்நிலையாக்கிக் கொள்ளவும் விரும்பினார்கள்.

சாக்ரடீஸ் மகான் சிறைவாசம் செய்தார்; மரண தண்டனையும் நிறைவேற்றப் பட்டது. அண்மையில் வாழ்ந்த காந்தியடிகளும் தம் கொள்கைகளுக்காகச் சிறைவாசம்

செய்ததை அறிவோம்; ஒரு மதவெறியனுல் சுட்டுக் கொல்லப்பட்டதையும் அறிந்திருக்கிறேம். நம் தமிழ் நாட்டிலும் அப்பர் இராமாநுசர் முதலானவர்கள் தங்கள் கொள்கைகளுக்காக எவ்வளவோ தியாகம் செய்தார்கள் என்பதையும் அறிந்து கொண்டிருக்கிறேம்.

சாக்ரடீஸின் தூல உருவத்தையும் வரலாற்றிலும் வரலாற்றுத் துணுக்குகளிலும் கண்ணுடியில் காண்பது போல் நாம் கண்டு கொள்வது சாத்தியமாயிருக்கிறது. சப்பை மூக்கும் தடித்த உதடுகளும் உடையவர் சாக்கரடீஸ் என்று தெரியவருகிறது சற்று முன்னே புடைத்திருக்கும் நெற்றியுடன் தன் பெரிய கண்களை உருட்டி உருட்டிப் பார்க்கிறர் அவர் ; பருத்த தொந்தியும் அழுக்குப் படிந்த கந்தையுமாகக் காணப்படுகிறர்! சுடுவெயில் என்றும், கடுங்குளிர் என்றும் பார்க்காமலே அலைந்து அலைந்து பேசிக் கொண்டிருக்கிறர்! இப்படியெல்லாம் வரலாற்றுக் கண்ணுடி காட்டுகிறது சாக்ரடீஸ் மகானை. ஆனல் எந்தக் கதைக் கண்ணுடியும் கற்பனைக் கண்ணுடியும் இப்படியெல்லாம் திருவள்ளுவரைக் காட்டவில்லை. பொதுவாக ஒரு யோகி யின் வடிவிலேதான் நம் மக்கள் கதைகளிலும் சித்திரங் களிலும் திருவள்ளுவரைக் கண்டு காட்டி வந்திருக்கிறர்கள். இந்த முகத்திலே உள்ளொளிக்கு இசைந்த ஒளிப் பொலிவை யும் கண்டு வந்திருக்கிறர்கள் நம் முன்னேர்.

எல்லாவற்றுக்கும் மேலாக, சாக்ரடீஸ் மகான் எந்தப் பெயருக்கும் தீங்கு செய்வதில்லை என்ற கொள்கையையும் மேற்கொண்டிருந்தார். திருவள்ளுவருக்கோ கொல்லாமை அறத்தின் உயிர்நிலைக் கொள்கை.

சாக்ரடீஸ் வாழ்ந்த காலத்தை வரையறுத்துத் தெரி விக்கிறது வரலாறு. இரண்டாயிரத்து நானூறு ஆண்டு

களுக்கு முன் சாக்ரடீஸ் தோன்றினர் என்பது நிச்சயமாகத் தெரிகிறது. சாக்ரடீஸின் காலத்தில் கிரேக்க நாட்டின் தலைநகரான ஏதென்ஸ் நகரில் குடியாட்சி நிலவியது. திருவள்ளுவரோ முடியாட்சியில் தமிழகத்தின் உன்னத காலம் ஒன்றில் வாழ்ந்தார். ஆராய்ச்சிப் பேரறிஞர் வையாபுரிப்பிள்ளை. சங்க நூல்களின் இறுதிக் காலத்தை ஒட்டிக் கிறிஸ்து பிறந்த ஐந்தாம் நூற்றாண்டில் வள்ளுவர் வாழ்ந்ததாக ஊகிக்கிறார்!

திருவள்ளுவரின் நூலைச் சங்கப் புலவர்கள் ஒப்புக் கொள்ள மறுத்தார்கள் என்றும் அதனால் கடைச்சங்கம் அழிந்து போயிற்று என்றும் ஒரு கதை வழங்குகிறது. இது உண்மையானால் இதிலிருந்து, 'கடைச் சங்கம் அழிந்து போயிற்று' என்னும் கதையையும் நம்பலாம். 'கடைச் சங்கத்தில் நூல்கள் தொகுக்கப் பெற்ற காலத்திற்கும் இவர் பிற்பட்டவர்' என்கிறார் திரு. வையாபுரிப்பிள்ளை. சங்கப் புலவர்களின் பாடல்கள் கி. பி. நாலாம் நூற்றாண்டின் இறுதியிலோ ஐந்தாம் நூற்றாண்டின் தொடக்கத்திலோ தொகுக்கப் பெற்றிருக்கலாம் என்பதும் இவர் ஊகம். ஆகவேதான், திருவள்ளுவர் கி.பி.. ஐந்தாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்திருக்கக் கூடும் என்று முடிவு காட்டு கிறார் இவர்.

திருவள்ளுவர் காலம் குறித்துப் பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை தாம் பதிப்பித்த 'திரிகடுகமும் திரிபஞ்சமூலமும்' என்னும் நூலின் முன்னுரையில் தம் கருத்தை வெளியிட்டி ருக்கிறார். இந்த நூல் சென்னைப் பல்கலைக் கழகச் சார்பில் வெளிவந்தது. முன்னுரைப் பகுதியில் இந்த ஆசிரியர் 'சுமார் கி. பி. 450-இல் திருக்குறள் தோன்றியதெனக் கொள்வோமாயின் அது உண்மையோடு பட்டதாகவே இருக்கலாம் எனத் தோன்றுகிறது' என்கிறார்.

போர் வீரராய் நாட்டுத் தொண்டாற்றியிருந்தாலும் சாக்ரடீஸ் சுபாவத்தில் பரம சாது. மகா ஞானிகள் மகா வீரருமாவர் என்பதை நாம் மறந்துவிடலாகாது. ஆனால் ஞானிகள் பெரும்பாலும் போர் வீரர்களாகப் பழகிப் பணியாற்றியதில்லை; அத்தகைய அவசியமோ சாக்ரடீஸ் வாய்ப்போ அவர்களுக்கு ஏற்பட வழியில்லை. ஆனால் போர் வீரராகவும் ஞானவீரராகவும் ஒருங்கே திகழ்ந்து இரு நிலைகளிலும் புகழ் பெற்றிருந்தார் என்பது ஓர் அதிசய மான வரலாற்றுச் செய்தி.

பின்னாளில் சாக்ரடீஸ் அறியாமையோடு போராடினார்; நன்மை தீமைகளைப் பகுத்தறிந்து, நன்மைக்காகத் தீமையை எதிர்த்து நின்றார். போர்க்களத்திலே தாம் விளைத்த சாகசங்களுக்குப் பரிசோ பட்டமோ பெறாதவர்; வாழ்க்கைப் போர்க்களத்திலே சமாதான காலத்தில் விளைத்த செயற்கருஞ் செயல்களுக்காக மரணதண்டனையும் விதிக்கப் பட்டார்.

ஏதென்ஸ் மக்கள் தங்களை நல்வழிப்படுத்த முயன்ற மகாத்மாமீது குற்றம் சாட்டினார்கள். கிரேக்க மக்கள் தொழுது வந்த தெய்வங்களை சாக்ரடீஸ் ஒப்புக்கொள்ளா மல் புதிய தெய்வங்களைக் கற்பனை செய்கிறாரே என்றார்கள். 'இளைஞர்களை இப்படியா ஒழுக்கத்திலிருந்து நழுவச் செய்வது?' என்றார்கள். இத்தகைய குற்றங்களுக்குச் சிறை வாசம், அபராதம் முதலான சாதாரணமான தண்டனைகள் போதுமானவை அல்ல என்றும் கருதினார்கள்.

'ஏதென்ஸ் நகரப் பெருமக்களே!' என்று பேசத் தொடங்கினார் சாக்ரடீஸ். வாதிகள் பேச்சில் உண்மை எதுவும் இல்லை என்று எடுத்த எடுப்பிலேயே சொல்லி விட்டார். அதே சமயம் வாதியின் கட்சியினர் புலப்படுத்திய

வாக்கு வன்மையையும் வியந்து பாராட்டினுர். அந்தச் சாதுரியம் கண்டு நானே பிரமித்துப்போனேன் !' என்ருர். அந்த வாக்குவன்மை தமக்கு இல்லை என்றும் தெரிவித்தார்.

வாதி கட்சியினரோ சாக்ரடீஸின் பேச்சுத்திறமையால் விசாரணை மன்றத்தினர் மயங்கிவிடலாகாது என்று முன் எச்சரிக்கை செய்திருந்தார்கள். இளைஞர்கள் மதிமயங்கப் பேசும் திறமை சாக்ரடீஸுக்கு உண்டு என்பது அவர்கள் கருத்து

'ஏதென்ஸ் நாட்டு மக்களே!' என்று சாக்ரடீஸ் மறுபடியும் பேசத்தொடங்கினுர். 'உங்கள் தீர்ப்பு எனக்கு திகைப்பை விளைவிக்கவில்லை' என்ருர். ஆனுல் தாம் அறிந்து எவருக்கும் தீங்கு செய்ததில்லை என்ருர். அதனுல் தான் 'என்னுல் இப்படி மனம்விட்டு உரையாட முடிகிறது' என்று தம் கள்ளங்கவடற்ற குழந்தையுள்ளம் புலப்படப் பேசினுர். 'என்னைக் குற்றமற்றவன் என்று என் மனச்சாட்சி சொல்லுகிறது' என்று தலைநிமிர்ந்து சொன்னுர்.

நான் செல்வனுக இருந்தால் என் உடைமைகளை அபராதமாய்க் கொடுத்துவிட மகிழ்ச்சியுடன் ஒப்புக் கொண்டிருப்பேன். பொருளை இழப்பதால் எனக்கு எவ்வகைத் துயரமும் இல்லை; ஆனுல் நான் ஏழை. அபராதம் கொடுக்கச் சக்தியில்லாதவன் என்று சாக்கரடீஸ் தமது நிலையைத் தெளிவுபடுத்தினுர். இப்படியெல்லாம் இவர் தம் இரண்டாம் சொற்பொழிவை முடித்தபின்னர், நீதிமன்றத்தார் தண்டனை விதித்தார்கள். கடைசியாக ஒருதடவை பேசினுர் சாக்ரடீஸ்.

'ஏதென்ஸ் மாநகரப் பெருமக்களே! எனக்கு நீங்கள் மரணதண்டனை விதித்திருக்கிறீர்கள்; என்னிடமிருந்து நீங்

கள் தப்பி வாழவேண்டும் என்பதற்காகத்தானே. உங்களுக்கு இதனுல் அதிக லாபம் ஒன்றும் கிடைத்துவிடவில்லையே' என்று தொடங்குகிறது இந்த மூன்ரும் சொற்பொழிவு.

இந்தத் தண்டனையில்லாவிட்டாலும் நான் குறுகிய காலத்திற்குள் இயற்கையாக மரணமடைந்துவிடுவேனே! என் ஆயுளின் இறுதி நெருங்கிக்கொண்டுதானே இருக்கிறது' என்ருர். அப்படியிருக்க, மரணதண்டனை விதித்துத் தீராத பழியை ஏதென்ஸ் மக்கள் ஏன் தேடிக்கொள்ள வேண்டும்? என்பது சாக்ரடீஸின் கேள்வி.

'போர்க்களத்தில் ஏற்படும் மரணத்திற்கு உத்தம வீரன் அஞ்சுவதில்லை; சாக்ரடீஸும் தாம் போராடிய காலங்களில் மரணத்திற்கு அஞ்சியதே இல்லை. ஆயுதத்தைக் கீழே போட்டு எதிரி காலில் விழுந்து உயிர்ப்பிச்சை கேட்பானு ஒரு வீரன்? போர்க்களத்தில் எப்படியோ அப்படியே நீதிமன்றத்திலும் நடந்துகொள்ள வேண்டியதுதான் என்கிருர் சாக்ரடீஸ். மரணத்தையும் தைரியத்தையும் தருமத்தையும் விட்டு உயிரைக் காப்பாற்றிக்கொள் வதைக் காட்டிலும் அறநெறியில் அபாயத்திற்கு அஞ்சாது சென்று கொண்டிருப்பதே முறை, மனிதனுக்கு மரணம் ஆபத்து அல்ல; அதர்மமே ஆபத்து என்கிருர்.

தம்முடைய எண்ணங்களும் கொள்கைகளும் தம்மோடு அழிந்துவிடுவன அல்ல என்பதை சாக்ரடீஸ் உறுதியாக நம்பியிருந்தார். தமக்குப்பின் மக்களை மேலும் கடுமையான அறிவுச் சோதனைகளுக்கும் அறச் சோதனைகளுக்கும் உள்ளாக்குவோர் தோன்றுவார்கள் என்று தீர்க்கதரிசன மாய்க் கூறுகிருர்.

சாக்ரடீஸ் குற்றவாளி இல்லை என்று வாக்களித்தவர்களை நோக்கியும் சில வார்த்தைகள் சொன்னார். தமக்கு நேரும் மரணமும் தமது நன்மைக்காகத்தான் என்று தாம் உறுதியாக நம்புவதாகச் சொன்னார். (இந்தச் சந்தர்ப்பத்திலேதான், தமக்குள்ளேயிருந்து எச்சரிக்கை செய்து வழி காட்டிவந்த தெய்வ வாக்கைக் குறிப்பிடுகிறார் இவர்.) அது தம்மை இப்படி எல்லாம் பேசும் போது தடுக்கவே இல்லை என்கிறார்.

'காலம் அதிகரித்து விட்டது. இன்னும் சில நாள் நீங்கள் உயிருடன் இருக்கப் போகிறீர்கள். நானோ இப்போதே உங்களை விட்டு நீங்குகிறேன். பாக்கியம் உங்களுடையதா, என்னுடையதா?— இறைவனுக்கே வெளிச்சம். விடை கொடுங்கள்' என்று இந்த இறுதிப் பேருரை முற்றுப் பெறுகின்றது.





# 4. இராமானுசர் நெறி

இராமானுசர் நெறியை ஸ்ரீ வைணவம் என்று குறிப்பிடுகிறோம். பரம்பொருளாக, மேலொரு பொருளும் இல்லா மெய்ப் பொருளாக, விஷ்ணுவை வழிபடுவோர் வைணவர். விஷ்ணு என்ற வட சொல்லுக்கு எங்கும் பரந்து நிறைந்திருப்பவன் என்று பொருள். இறைவன் என்ற தமிழ்ச் சொல்லின் பொருளும் இதுவே. விஷ்ணுவைப் பகவானாக வழிபடுவதால் வைணவர்களைப் பாகவதர் என்றும் குறிப்பிடுவர். வள்ளுவர் 'ஆதிபகவன்' என்பதும் ஒப்பு நோக்கத்தக்கது. இச்சமயத்தின் அடிப்படை வேதாந்தத்திற்கு விசிஷ்டாத்வைதம் என்று பெயர். அனைத்துலகும் உயிர்களும் இறைவனுக்கு உடம்பு என்பது இராமானுசர் நிலைநாட்டிய 'ஸ்ரீ வைஷ்ணவ விசிஷ்ட்டாத்வைதத்தின் உயிர் நிலைக் கொள்கை. உலகில் உள்ள அனைவரும் ஆண்டவனுக்கு அன்பராக, அடியவராக உரிமையுள்ளவர்களே என்பது இக் கொள்கையின் உட்பொருள்.

அனைத்துலகும் உடலாகக் கொண்டு இறைவன் உள் நின்று பாதுகாப்பதால் உலகப் பணியும் அடங்கும். இறைவனுக்குப் பணிபுரிவதைக் காட்டிலும் அன்பர் பணி முக்கியமானது. அன்பும் பணியுமாகிய 'இச்சுவை தவிர யான் போய் இந்திரலோகம் ஆளும் அச்சுவை பெறினும் வேண்டேன்' என்ற மன உறுதியுடன் தன்னைச் சரணமடையும் அன்பர் இம்மையிலேயே பேரின்பம் துய்க்குமாறு இறைவன் இங்கேயே எல்லா நலன்களையும் அளித்து வாழ்வித்தருளுவான். நன்னெஞ்சே! நம் பெருமான் நமக்கருள்தான் செய்வானே' என்ற நம்பிக்கை இன்றியமையாதது.

அவன் அடியவர்களின் உள்ளத்தைத் தன் அன்பாலும் அழகாலும் வசீகரித்து அவர்களை முடிவில் அன்பர் பணிக்கு ஆளாக்கி விடுகிறுன். வாழ்க்கை அன்பு மயமாகும் போது இன்பமாகிறது. தொண்டு நெறி இந்த அடியவர்கள் தம்மிடத்திலும் பிறரிடத்திலும் ஒரு நிகரான புத்தியுடைய சமத்வ நிலையில் இருப்பார்கள் என்ற குறிப்பை இராமானுசர் பகவத் கீதையின் பத்தாவது அத்தியாயத்தில் ஐந்தாம் சுலோகத்தில் வரும் 'ஸமதா' என்பதன் பொருளை விவரிக்கும் போது வெளியிட்டுள்ளார். அதற்கு மேலும் விளக்கம் தருகிற வேதாந்த தேசிகர், 'தன்னிடத்திலும் தன் நண்பர்களிடத்திலும் தன்னிடம் பகைமை கொண்டுள்ளவர்களிடத்திலும் ஒரு நிகரான புத்தியுடையவனே வைணவன் என்று பொருள்படும் விஷ்ணு புராண வசனத்தை எடுத்துக் காட்டுகிறுர் மேற்கோளாக.

தம் காலத்திலுள்ள சமயக் கொள்கைகளையும் தத்துவக் கருத்துக்களையும் அலசி ஆராய்ந்து இராமானுசர் தமது 'ஸ்ரீ வைஷ்ணவ விசிஷ்டாத்வைத சித்தாந்த'த்தை ஒரு முழுக் கட்டமாக உருவாக்கியுள்ளார் என்பது இவரது வாழ்க்கை வரலாறுகள் தரும் முக்கியமான ஒரு செய்தியாகும். இம் முழுக் கட்டுக் கோப்பையும் அவர் தம் பேருரையாகிய ஸ்ரீ பாஷ்யத்தில் மட்டும் கண்டுகொள்வதற்கில்லை; இவரது வாழ்க்கையும் உபதேசங்களும் பற்றிய குருபரம்பரைச் செய்திகளை ஒழுங்குபடுத்தி ஆராய்ந்தும் பார்க்க வேண்டும்.

இராமானுசர் ஸ்ரீ பாஷ்யத்தாலும் தம் வாழ்க்கையாலும் வாக்காகிய அருளுரைகளாலும் தனிப் பெரும் பணிகளாலும் காட்ட முயலும் மெய்ப்பொருள், மூளைக்கும் தத்துவ சிந்தனைகளுக்கும் தேவைப்படும் தெய்வம் அன்று; மக்களின் இதயமும் ஆன்மாவும் காதலாகிக் கசிந்துருகித்

தேடித் தவிக்கும் அன்புருவாகிய அருள்நிதி. அருளாளனுகிய அழகனைச் சரணமடைவோர் அனைவரும் வைணவர்கள் என்பது இராமானுசரின் தேர்ந்த கொள்கை.

'திக்குற்ற கீர்த்தி இராமானுசன்' என்று இராமானுசரின் காலத்தவரான திருவரங்கத்து அமுதனர் தாம் இயற்றிய இராமானுச நூற்றந்தாதியில் குறிப்பிடுகிருர். இது இவர்தம் சீடரான கூரேசன் முதலானவர்களுடன் காஷ்மீரம் வரை சென்று தம் கொள்கைகளைப் பரப்பியதையும் தம் காலத்திற்குமுன் தம் பக்திநெறிக் கொள்கைக்கு இசைந்ததாக வழங்கிய வியாக்கியானத்தைக் காஷ்மீரத்தில் கண்டுபிடித்துத் தம் நெறியின் அடிப்படையை உறுதிப்படுத்திப் புகழ் பெற்றதையும் நினைவூட்டுகிறது. கூரேசனை இராமானுச நூற்றந்தாதி 'வஞ்சமுக் குறும்பாம் குழியைக் கடத்தும் நம் கூரத்தாழ்வான்' எனச் சிறப்பித்துக் காட்டுகிறது.

சாதிச் செருக்கு, கல்விச் செருக்கு, செல்வச் செருக்கு ஆகிய இவற்றை 'வஞ்சமுக் குறும்பு' என்பர். காமம், வெகுளி, மயக்கம் ஆகிய மூன்றையும் சாதாரணமாக 'முக் குறும்பு' எனக் குறிப்பிடுவதுண்டு. சாதியும், கல்வியும், செல்வமும் நல்லவை போலத் தோன்றி மதியை வஞ்சித்து அல்லல் விளைப்பதால் இவற்றை 'வஞ்சமுக்குறும்பு' என வரையறுத்துக் குறிப்பிடுகிருர் அமுதனர். வஞ்சமுக் குறும்பாம் படுகுழிகளைக் கடந்து தொண்டு நெறியில் நிலை பெறுவோன் ஸ்ரீ வைணவன் என்பது குறிப்பு. எழுபத்து நான்கு சிம்மாசனுதிபதிகளும் (ஸ்ரீ வைஷ்ணவ சமய பீடங்களில் வீற்றிருந்தவர்களும்), எழுநூறு ஏகாங்கிகளும், பன்னீராயிரம் பாகவதர்களும் ஒரே குழாமாய்த் தொண்டாற்றுமாறு இராமானுசர் தம் திருநெறியைப் பரந்த உள்ளத்துடன் பரப்பி வைத்ததாகக் குருபரம்பரை வரலாறுகள் ஒருமுகமாய் அறிவிக்கின்றன.

கதியற்றவர்களுக்கெல்லாம் கதியாக வேண்டும் என்ற நோக்குடன் இராமானுசர் நாற்பாற்குலத்திற்கும் கீழ்ப் பட்டவர்கள் என்று ஒதுக்கப்பட்டிருந்தவர்களைத் 'திருக் குலத்தார்' என்ற அழகிய தமிழ்ப் பெயரால் அழைத்துத் திருத்திப் பணிகொள்ள முயன்றதும் இவரது பரந்த உள்ளத் திற்கு ஒரு பெருஞ்சான்றுதான். 'ஆலயப் பிரவேசம் என்று காந்தியடிகள் அண்மையிற் செய்த புரட்சிகரமான சீர்திருத் தத்தையும் இராமானுசர் அன்றே எதிர்பார்த்தது போல் திருக்குலத்தாரை மேலைக் கோட்டை என்ற திருநாராயண புரத்துக் கோயிலுக்குள் அனுமதித்த அந்த வழக்கம் ஆண்டு தோறும் மூன்று தினங்களில் தொடர்ந்து நடைபெற்று வந்திருப்பதைப் பலரும் அறிவர்.

புறச் சமயிகளான சமணர்களையும் பௌத்தர்களையும் இவர் தம் பாகவதப் பெருந்திரளில் சேர்த்துக்கொண்டார். சோழ அரசினரால் துன்பம் நேர்ந்தபோது திருவரங்கத்திலி ருந்து மைசூர்ச் சீமைக்கு நடந்து சென்று அங்குள்ள சமண அரசனை வைணவனாக்கி அவனுதவியால் தமது சமயத்தை அந்தப் பகுதிகளிலும் பரவச் செய்தார். முகமதியருடனும் நட்புக் கொண்டு 'செல்வப் பிள்ளை' என்ற விக்கிர கத்தை மீண்டும் மேலக்கோட்டையில் பிரதிட்டை செய்து வைத்தார். இச்செயலை இராமானுசரின் உலகியற் பேரறி வுக்கு ஒரு சிறந்த சான்றாகக் காட்டலாம்.

வேதாந்தியாக இருந்ததுடன் இராச தந்திரியாகவும் நிர்வாகத்திறன் வாய்ந்தவராகவும் வாழ்ந்த வித்தகர் இவர். கோயில்களின் நிர்வாகத்தைத் திருத்தி அமைத்து அவை பக்திப் பண்ணைகளாகத் திகழ்ந்திருந்ததுடன் சமுதாய வாழ்க்கையின் மேம்பாட்டுக்கு உரிய வளர்ப்புப் பண்ணை களாகவும் திகழுமாறு செய்தார். பெரிய கோயில் என்று

வைணவர்கள் கொண்டாடும் திருவரங்கத்தை ஸ்ரீ வைணவத்தின் தலைநகரமாக விளங்கச் செய்தார்.

இத்தகைய வாழ்க்கைக்கும் குறுதிசயத்திற்கும் உரியதோர் இமயச் சிகரமாக மதிக்கத் தக்கது, திருமந்திரத்தையும் அதன் இரகசியப் பொருளையும் இவர் எல்லாருக்கும் வழங்கினார் என்ற வரலாறு. குருவின் ஆணையை மீறி அவர் தமக்கு உபதேசித்த திருமந்திரப் பொருளைத் திருக்கோட்டியூர்ச் சந்நிதியின் மேல் தளத்திலிருந்து அனைவருக்கும் உதவினார்.

இச் செயலைத் திருக்கோட்டியூர் நம்பி மனமார வாயாரப் பாராட்டினார். பக்தி வழியில் ஒரு புது உலகத்தையே இராமானுசர் கண்டுபிடித்துக் காட்டியது போன்ற ஓர் அதிசய உணர்வு குருவின் உள்ளத்திலும் உதித்தது.

தன்னுயிர் தன்னைக் கொண்டு
தான் பிழைத்திடுவ தன்றி
மன்னுயிர்க்கு இரங்கித் தன்னை
மைந்தனே! மாய்க்கப் புக்கார்
இந்நிலத்து இல்லை, இல்லை
ஏழுல கத்தும் இல்லை!

என்பது குருவின் பாராட்டுரை.

தனி மனிதனுடைய விடுதலையைக் குறிக்கோளாகக் கொண்டிருந்த தத்துவ உலகிலே சமுதாயப் பெரும் பணிக்கு இன்றியமையாததோர் அடிப்படை வேதாந்தத்தை இராமானுசரது திருமந்திரதான மனப்பான்மையில் நாமும் கண்டு கொள்ளலாமென்று தோன்றுகிறது. ஆன்மாவுக்காக உலகத்தைத் துறக்குமாறு உபதேசித்தார் முன்னோர் என்றால்.

உலகத்திற்காக ஒருவன் தன் ஆன்ம நாசத்திற்கும் தயாராகி விடலாம், தன் முத்திப் பேரின்பத்தையும் துறந்துவிடலாம் என்பது இராமானுசர் கண்ட புதிய வைணவப் பெரு நெறி எனலாம்.

நம்மாழ்வாரின் கருணை குறித்து, 'பிறர் துயரம் (பரா நர்த்தம்) நெஞ்சிலே படுகையிலே நாட்டுக்காகத்தாம் மன்றுடுகிருர்' எனக் கூறுவதுண்டு. இந்த ஆழ்வாரை ஸ்ரீ வைணவத்தின் 'முதல்தாய்' என்றும் இராமானுசரை இதத்தாய் ('வளர்ப்புத்தாய்') என்றும் கூறுவர். நம்மாழ் வாரைப் பாரதம் பாடிய வில்லிபுத்தூரார் 'தத்துவத்தின் முடிவுகண்ட சதுமறைப் புரோகிதன்' என்கிருர். 'இராமா னுசரை, அதே தத்துவத்தின் முடிவை ஸ்ரீ பாஷ்யத்திலும், வேறு நூல்களிலும், வாழ்க்கை நெறியிலும், பல்வேறு அருளுரைகளிலும், நிர்வாகத்திரனிலும் கூட நிலைநாட்ட முயன்ற நிகரற்ற 'புரோகிதர்' எனலாம்.

இராமானுசரின் கருணை மக்களிடையே அகப்புரட்சி விளைத்துப் புதியதொரு விழிப்பைத் தோற்றுவித்தது. இக் கருணை, நஞ்சிட்டுக் கொல்ல முயன்றவர்களையும் மன்னித்து ஆட்கொண்டது; வஞ்சித்துக் காசி யாத்திரையில் கொல்ல முயன்ற பழைய ஆசிரியரான யாதவப் பிரகாசரையும் ஆட் கொண்டு கோவிந்த ஜீயராக்கி வாழ்வித்தது; எதிரிகளையும் அன்பராக்கி அணைத்துக் கொள்ள எப்போதும் சித்தமாக இருந்தது.

இதே கருணைதான், 'இத் தஞ்சமாம்பாள் வாழ்க்கைத் துணைவியாகாள்!' என்று மூன்று தவறுகளுக்காக மனைவியை விலக்கி வைத்தது. இப் பெருந்தவறுகளில் ஒன்று, குருவின் குலத்தை இகழ்ந்தது. அடுத்த தவறு, 'ஒரு பாகவதரை இகழ நினைத்து இருந்த இடம் சுத்தம் பண்ணி'யது என்கிறது மூவாயிரப்படி குருபரம்பரை. பாகவதருடைய சாதி கருது வதே இகழ்வதுதான் என்பது குறிப்பு. மூன்ரும் தவறு,

'பசித்தார்க்கு ஊண் இருக்க, இல்லை என்றது; பசித்து வந்தவர் ஏழைத் தொழிலாளியான ஒரு பாகவதர் என்பது குரு பரம்பரை நூல்களின் செய்தி. அன்பும் துறவும் இப்படி இரண்டறக் கலந்து நின்றது இந்த அருளாளரின் நீண்ட பெருவாழ்விலே.

இராமானுசர் மறையும்போது, தொண்டு ஒன்றே நெறி என்றும் தொண்டர்களை இகழ்வதே மோட்சவிரோதம் என்றும் சுருங்கக் கூறி விளங்க வைத்தார் என்று குரு பரம்பரைக் கதைகள் கூறுகின்றன. தான் அறப்பெய்து மாய்ந்து போகும் மேகம் இறுதியில் சில அமுதத்துளிகள் சிந்தி மறைவதைப் போல், இராமானுசர் அருகிலிருந்தவர்களை நோக்கி எண்பத்திரண்டு வார்த்தைகள் சொன்னதாகப் 'பிரபந்தாம்ருதம்' என்ற நூல் தெரிவிக்கிறது. இவற்றுள் முதலாவது வார்த்தை, இறைவன் தொண்டிலும் அடியவர் தொண்டிலும் குருவின் தொண்டிலும் ஏற்றத்தாழ்வு கொள்ளாமல் சமபுத்தி கொள்ளவேண்டும் என்பது பாகவதர்கள் ஒருமுகமாய் ஒரு நோக்குடன் ஒரு குலம்போல் வாழ்க்கை நடத்த வேண்டும் என்பது இராமானுசரின் இந்த எண்பத்திரண்டு வார்த்தைகளாகிய இறுதிவாக்கின் சாரம்.

'தமிழ் ஒரு மூன்றும், சுருதிகள் நான்கும், எல்லையில்லா அறநெறி யாவும் தெரிந்தவன்' என்று இராமானுசரைக் குறிப்பிடுகிறது இராமானுச நூற்றந்தாதி (பாட்டு - 44). இவரது ஸ்ரீ வைணவநெறியை 'உபய வேதாந்தம்' எனக் கூறுவதுண்டு. இந்த உபய வேதாந்தத்தை முதலாழ்வார் மூவருள் முதல்வரான பொய்கையார் நம் தமிழகத்தில் ஓர் அழகிய மங்கல விளக்காக ஏற்றிவைத்தார் என்பது திருவரங்கத்து அமுதனார் கருத்து. 'எம் பொய்கைப்பிரான் மறையின் குருத்தின் (வேதாந்தத்தின்) பொருளையும் செந்தமிழ் தன்னையும் கூட்டி ஒன்றத் திரித்து அன்று

எரித்த திருவிளக்கைத் தன் திருவுள்ளத்தே இருத்தும் பரமன் இராமானுசன்' என்பது அமுதனார் வாக்கு (இரா. நூ. பாட்டு - 8). மற்ற ஆழ்வார்களின் வாக்கும் இராமானுசருக்கு வழிகாட்டியது என்பதையும் விவரமாய்க் குறிப்பிடுகிறார் இவர். தம் அந்தாதியின் முதற் பாட்டிலேயே அமுதனார் இராமானுசரை நம்மாழ்வாரின் 'அடிபணிந்து உய்ந்தவன்' என்று அறிமுகப்படுத்துகிறார்.

'உளன் கண்டாய், நன்னெஞ்சே! உத்தமன்' என்று பொய்கையார் காட்டும் இறைவனை "உயர்வற உயர்நலம் உடையவன்" என்று நம்மாழ்வார் எல்லையற்ற அழகிய குணங்களுடனும் 'அழியா அழகு' என்ற வடிவுடனும் காட்டுகிறார். அழகனுக்கு ஆயிரம் பெயர். இங்கே ஆயிரம் என்றால் எண்ணிறந்தவை. இப்பெயர்களெல்லாம் இறைவனது தூய நற்குணங்களுக்குத் 'தமர் உகந்த' நினைவுக்குறிகள் என்பர். 'பேரும் பல பலவே' என்பது நம்மாழ்வார் வாக்கு. இந்த ஆழ்வார்களின் கொள்கைகளை இராமானுசர் வழிகாட்டியாகக்கொண்டு 'மறையின் குருத்து 'என்று மதிக்கப்பெறும் உபநிடதங்களுக்குப் பொருள் கொள்ளுகிறார்.

பரம் பொருளுக்குக் குணம் உண்டா, இல்லையா? உண்டு என்று கூறும் உபநிடத வாக்கியங்களும் உண்டு; இல்லை என்று கூறும் வாக்கியங்களும் உண்டு, குணம் உண்டு என்பதற்கு எல்லா நற்குணங்களும் உண்டு எனப் பொருள் கூறுகிறார் இராமானுசர். குணம் இல்லை என்ற கூற்றுக்கு தீயகுணம் இல்லை என்று பொருள் கூறுகிறார். இப்படிப் பொருள்கொண்டு உபநிடதங்களில் முரண்பாடு என்ற குற்றம் இல்லை என்கிறார்.

அம்மையப்பனுகிய அழகனை அடைவிப்பது அன்புநெறி என்ற பக்திநெறியின் உயர்நிலையாகிய அடைக்கலம் புகுதல் என்ற சரணுகதி. இக்கொள்கையை இராமானுசர் 'சரணுகதிகத்யம்' என்ற பிரபந்தத்திலே பின்பற்றிக் காட்டியுள்ளார். இந்த நெறியைப் 'பிரபத்தி நெறி' என்றும் இந்த நெறியில் செல்வோரைப் 'பிரபன்னர்' என்றும் கூறுவதுண்டு. இந்நெறியில் பக்தி, காதலாக மலர்ந்து, தொண்டாகக் கனிகின்றது. இப் பேற்றை அடைவதற்கு உபாயம் அவன் அருள்தான்.

ஆழ்வார்களின் வாக்கிலே அர்ச்சாவதாரம் என்ற விக்கிரக வழிபாடு அழியாப் புகழ் பெற்றிருக்கிறது. ஆழ்வார்களின் பக்தி சிறப்பாகத் தென்னுட்டுத் திருக்கோயில்களுக்கு என்றும் வாடாத பொலிவைத் தந்திருக்கிறது. இவர்கள் முனிவர்களைக்காட்டிலும் சிறந்தவர்கள் என்றும் இவர்களை 'மால் உகந்த ஆசிரியர்' என்றும் வேதாந்த தேசிகர் கூறியுள்ளார். இந்தத் தமிழ்த் திருத்தொண்டர்கள் இறைவனை நேரில் அவன் காட்டக்கண்டு அனுபவித்து, அந்த அனுபவத்தைத் தமிழாக்கியவர்கள் என்பது ஸ்ரீ வைணவர்களின் நம்பிக்கை. இவர்கள் பாடல்களை 'ஆழ்வார்கள் செந்தமிழ்' என்கிருேம். இந்த ஆழ்வார்களில் நம்மாழ்வாரைக் 'குலபதி' என்றும் 'பரமாசாரியன்' என்றும் கூறுகிருர்கள். இவரது திருவாய்மொழியை இவரே 'பாலேய் தமிழர், இசைகாரர், பக்தர் பரவும் ஆயிரம்' என்கிருர். இந்த ஆயிரத்தத்தைத் தமக்கு வழிகாட்டியாகக் கொண்டவர் இராமானுசர்.

ஆழ்வார்களின் புகழ் தமிழகத்தைக் கடந்து பரவியிருந்தது என்பதற்குப் பாகவத புராணமும் சான்று தருகிறது. பக்தியே தென்னகத்தில் சிறப்பாகத் தோன்றித் திகழ்ந்தது

என்ற கருத்தையும் இப்புராணத்தில் காணலாம். உபய வேதாந்தம் என்ற செம்பொருளைச் செந்தமிழால் அளித்த ஆழ்வார்களுள் நம்மாழ்வாரை 'மறைகளை ஆயிரம் இன் தமிழால் செய்தற்கு உலகில்வரும் சடகோபன்' எனச் சிறப்பித்துப்பேசுகிறது இராமானுச நூற்றந்தாதி. நம்மாழ்வாரின் இந்த 'ஆயிரம் இன்தமிழ்' தான் திருவாய்மொழி. 'வாய் மொழி' என்ற சொல் வேதம் என்ற பொருளில் வருகிறது, பத்துப் பாட்டுள் ஒன்றாகிய பரிபாடல் என்ற சங்கஇலக்கியத்திலே. வாய்மொழி: வாய்மை + மொழி = உண்மை வாக்கு. திருமாலை 'வாய்மொழி முதல்வன்' என்று குறிப்பிடுகிறது பரிபாடல் தமிழ் வேதமாகிய திருவாய் மொழியைத் தெளிய ஓதினால் தெளியாத மறைகளான வடமொழி வேதங்களையும் தெரிந்து தெளியலாம் என்று 'சந்த மிகு தமிழ் மறையோன்' என்று தம்மைத் தாமே சொல்லிக் கொள்ளும் வேதாந்த தேசிகர் கூறியுள்ளார். இராமானுசரும் இவ்விதமாகத் தெளிவு பெற்றே தம் வேதாந்த நெறியைக் கண்டு தெளிந்தார் எனக் கருதுவது மிகையாகாது.

நம்மாழ்வார் வாக்கை 'நெறிதரும் செந்தமிழ் ஆரணம்', என்று அமுதனார் தம் நூற்றந்தாதியில் குறிப்பிடுவதைக் காண்கிறோம். திருமாலை, முழுமுதற் கடவுளாகக் கொண்டு வழிபடும் ஸ்ரீ வைணவம் ஆழ்வார்களுக்கு முன்பே நம் தமிழகத்தில் தழைத்திருந்தது. இதைத் தக்கதொரு தத்துவ அடிப்படையில் நிலை நிறுத்திய பெருந் தமிழர்களில் தலை சிறந்தவர் நம்மாழ்வார். சங்க இலக்கியங்களில் சிறப்பாகக் குறிக்கப்படும் கண்ணன் வழிபாடு பரிபாடலிலே ஏறத்தாழ நம்மாழ்வாரின் ஸ்ரீ வைணவக் கொள்கைகளை நன்கு நினைவூட்டும் முறையில் வளர்ந்திருப்பதைக் காண்கிறோம்.

ஆயர்குல மகளிர் கண்ணனிடம் காதல் கொண்டிருந்த தையும் தொல்காப்பியர் அறிந்து குறிப்பிடுவதுபோலத் தோன்றுகிறது. 'காமப் பகுதி' என்று தொல்காப்பியனுர் குறிப்பிடுவது, ஆழ்வார்களின் காதற் பாசுரங்களை நினை லூட்டுகிறது. கண்ணன் காதல் என்ற பக்திப் பெருங் கொள்கை நீண்ட காலமாகத் தமிழகத்தில் வேரூன்றிக் கற்பகமாகி வளர்ந்து நம்மாழ்வாரின் திருவாய் மொழியைக் கொம்பிலே கனிந்த கனியாகத் தந்திருக்கிறது.

திருவாய் மொழியைத் தந்திருக்கும் செந்தமிழை 'நெறி தரும் செந்தமிழ்' என்பது பொருத்தமே. வேதாந்த உலகில் இராமானுசருக்கு ஒளிகாட்டி ஸ்ரீ வைணவ நெறியும் காட்டியது இவரது 'நெறிதரும் செந்தமிழ்'க் குலதனமே என்பது இன்றைய ஆராய்ச்சியாளர் கருத்து.



# 5. உண்மையே அழகு

மூன்று யாத்திரிகர்கள் ஒருவரை ஒருவர் அறிந்து கொள்ளாமல் தனித்தனியே சஞ்சரித்துக்கொண்டிருந்தார்கள். குறிப்பிட்ட ஓர் இடத்திற்குப் போய்ச் சேரவேண்டுமென்று ஒருவரும் திட்டமிட்டுக் கொள்ளவில்லை. ஒரு நாள் இருந்த இடத்தில் மற்றொரு நாள் தங்கியிராமலே ஊரூராய்த் திரிந்துகொண்டிருந்தார்கள். எனினும், இவர்களுடைய இந்த யாத்திரைக்கும் ஒரு குறி உண்டு; நெறியும் உண்டு.

'நெஞ்சமே! மெய்ம்மையே காண விரும்பு' என்பது இவர்களில் ஒருவர் வாக்கு. மெய்ப்பொருளை மெய்ம்மையாகவே காணவிரும்புமாறு இவர் தம் நெஞ்சுக்கு உபதேசிக்கிறார். மெய்ப்பொருளைக் காணவேண்டும் என்பது இம் மூவருக்கும் ஒரு பொதுவான குறிக்கோள் எனலாம். ஆனால் எந்த நெறியில் அதை எப்படிக் காண்பது? எங்கே?

உண்மையின் முகவரி யாருக்குத் தெரியும்? விண்ணில் இருக்கிறதா? அது மண்ணில் இருக்கிறதா? அண்மையிலா, சேய்மையிலா, தொலை தூரத்திலா? இன்ன திசையில், இன்ன கோணத்தில் மெய்ப்பொருளைக் காணலாம் என்று தான் சொல்ல முடியுமா? மூவரும் அங்கும் இங்கும் அருள் செலுத்திய வழியெங்கும் சென்றுகொண்டிருந்தார்கள்.

இவர்கள் ஒருமுகமாய் நின்று கருத்து ஒருமித்த நிலையில் உண்மையைக் காணவேண்டும், கண்டுகாட்டவேண்டும் என்பது இறைவன் திருவுள்ளம், திருவருள். இதை இவர்கள் இப்போது அறிந்துகொள்ளவில்லை.

இவர்களில் ஒருவர் கச்சி என்ற காஞ்சி மாநகரில் தோன்றியவர்; இந்நகரம் அக்காலத் தொண்டை மண்டலத்தின் பெருநகர்; பல்லவப் பேரரசின் தலைநகர்; வேறொருவர் மகாபலிபுரம் என்ற மாமல்லபுரத்தில் தோன்றியவர்; மாமல்லபுரம் என்றும், மல்லை என்றும், அந்நாளில் கூறப்பட்ட இவ்வூர் பல்லவ மகாராச்சியத்தின் பண்டைப் புகழ்பெற்ற துறைமுகம். இம் மூவரில் மயிலாப்பூர்க்காரரும் ஒருவர்; இப்போது சென்னையின் பகுதியாக இருக்கும் மயிலாப்பூர் முன்னாளில் 'தேவமர் சோலை மாடமாமயிலை' என்று புகழப் பெற்ற திருநகரமாயிருந்தது. தொண்டை நன்னாட்டிலே வைணவ - சைவ - பௌத்த - சமண சமயிகளாக இருந்த தமிழ் மக்களின் பண்பாட்டை ஒரு பன்னிற மலர்போல் மலரச் செய்துவந்த இம்மூன்று பேரூர்களும் அக்கால நாகரிகத்தின் சில முக்கிய வளர்ப்புப் பண்ணைகள்; வடமொழித் தென்மொழிகளின் கூட்டுறவுப் பண்ணைகளும் கூட.

இம் மூன்று பயணிகளையும் 'ஓடித்திரியும் யோகிகள்' என்று வருணிக்கின்றன குருபரம்பரைக் கதைகள்; பொதுவாக, யோகிகள் ஒரு குறித்த இடத்தில் அமைதியாக அமர்ந்து ஒருமையுள்ளத்துடன் தியான வாசலைத் திறந்து தங்கள் லட்சியத்தையோ, இஷ்டமூர்த்தியையோ காண விரும்புவார்கள், ஆனால் இந்த 'யோகிகள்' மூவரும் அகத்தில் அமைதியும் புறத்தில் பரபரப்புமாய், இறைவனுடைய திருப் பெயர்களை ஓதித் திரிந்தார்கள். 'ஆடிப் பாடி அரங்க, ஓ!' என்று அழைக்கும் தொண்டர் குழுவினர் இவர்கள்.

இவர்களில் மாமல்லபுரத்தார் 'தீர்த்தகரர் ஆமின் திரிந்து' என்று பிறருக்கு உபதேசிப்பதைக் காண்கிறோம். 'தீர்த்தகரர்' தீர்த்தங்கரர் என்பதன் சிதைவு. சமணப் பெரியோர்களைக் குறிக்கும் இச்சொல், இங்கே, தாம் திரிந்த இடங்களையெல்லாம் பரிந்து தூய்மைசெய்யக்கூடிய

பாகவதப் பெரியோர்களை (பகவர்களை) க் குறிப்பிடுகிறது. இத்தகைய தீர்த்தங்கரர்களாகத் திரிந்துகொண்டிருந்தனர் மூவரும் எனலாம்.

இவர்கள் 'திரிதலால் தவம் உடைத்துத் தரணிதானே!' என்று மக்கள் நம்பியதாகவும் கருதலாம்.

'பாத தூளி படுதலால் இவ்
உலகம் பாக்கியம் செய்ததே!'

என்றவாறு தொட்டதைத் தூய்மை செய்த இப்பெரியோர்கள் உளம் தொட்டதை உவந்து அழகு செய்யும் கலைஞர்களாகவும் திகழ்ந்தனர்.

கடைசியாக இவர்கள் திருமுனைப்பாடி என்று முன்னுளில் சொல்லப்பட்ட தமிழகப் பகுதியில் திருக்கோவலூரை நெருங்கி வந்துகொண்டிருந்தார்கள். வெவ்வேறு வழிகளில் வந்துகொண்டிருந்தவர்கள் யாத்திரையின் முடிவாக ஓர் இடத்தில் சந்திக்கக்கூடும் என்பதையும் எதிர்பார்க்கவில்லை.

கதிரொளி மங்கிவிட்டது. அந்தி கருகுமுன்பே மேகங்கள் கறுத்துத் திரண்டு வானத்தை மூடிவிட்டன. காஞ்சி ஊரர் திருக்கோவலூரில் ஒரு வீட்டுவாசலில் வந்துநின்று, 'இரவில் தங்க இடம் கிடைக்குமா?' என்று கேட்கிறுர். ஒடுக்கமான இடைகழியை ஒருவர் காட்ட, இவர் அலுப்பும் களைப்பும் தீரக் காலை நீட்டிப் படுத்துக்கொள்ளுகிறுர்; கண்கள் மூடிக்கொள்கின்றன.

சிலுசிலுவென்று தூற்றல்; அந்தத் துளிகளினூடே வீசுகிறது ஈரவாடை. வீட்டு வாசலில் வேருெருவர் வந்து நிற்கிறுர்-மாமல்லபுரத்தார். 'படுக்க இடம் கிடைக்குமோ?'

என்று இவரும் கேட்கிறார், 'ஒருவர் படுக்கலாம், இருவர் இருக்கலாம்' என்று சொல்லிக்கொண்டே முதலாமவர் எழுந்து இடம் கொடுக்கிறார்.

இருவரும் உட்கார்ந்துகொண்டிருக்கும்போது, சளசள வென்று மழை பெய்கிறது. மின் வெட்டுகிறது, இடி இடிக்கிறது. இன்னொருவர் ஓடிவந்து, 'இடம் கிடைக்குமா?' என்று கேட்கிறார். இவர் மயிலை ஊரார். 'ஒருவர் படுக்கலாம், இருவர் இருக்கலாம், மூவர் நிற்கலாம்' என்று, இருவரும் மூன்றாமவரையும் அழைத்துக்கொள்கிறார்கள்.

'அடியேன் பொய்கை' என்று அறிமுகப்படுத்திக் கொள்கிறார் காஞ்சிபுரத்தார். 'அடியேன் பூதம்' என்று அறிவித்துக்கொள்கிறார் மாமல்லபுரத்தார். 'அடியேன் பேய்' என்கிறார் மயிலை ஊரார்.

முகம் தெரியாத இருட்டிலே மூவரும் அகத்தோடு அகம் தொட்டுப் பேசிக்கொண்டிருக்கிறார்கள். பாகவதர்கள் கூடிக் குலாவும்போது பகவானைத்தவிர வேறு பொருள் குறித்துப் பேசமுடியுமா? இப்போது அந்த இடைகழியில் நெருக்கம் முன்னிலும் அதிகரிக்கிறது. ஏன்?

எப்படியோ நான்காமவனும் இங்கு வந்து நுழைந்து விட்டான். மூவரும் ஆச்சரியப்படுகிறார்கள். புதியவனோ தன்னை அறிமுகப்படுத்திக்கொள்ளவும் இல்லை. வெளியே சோவென்று அடித்துச்சொரிகிறது மழை. ஒரே காரிருட்டு. பொறுக்கமுடியாத நெருக்கம். என்செய்வது? ஆ, விளக்கு இருந்தால் . . . ?

பொய்கையார் மாமல்லபுரத்துக் கடற்கரையிலோ, மயிலைக் கடற்கரையிலோ நின்று, கடலில் தீபசிகைபோல் உதித்துவரும் சூரியோதயங்களைப் பார்த்துப் பரவசமாய் இருப்பவர். அச் சூரியோதயங்களில் ஒன்று இப்போது மனக்கண்முன் வருகிறது. அந்தச் சூரிய விளக்கை அப்படியே ஒரு பாட்டில் ஏற்றிவைக்கிறார். வையமாகிய தகழியில் கடல் நீரை நெய்யாகக்கொண்டு எரியும் அந்த விளக்குடன், பூதத்தார் அன்பாகிய தகழியில் ஆர்வத்தை நெய்யாக வார்த்துச் சிந்தையைத் திரியாக இட்டு ஒரு ஞானச் சுடர் விளக்கும் ஏற்றி வைக்கிறார்.

இந்த இரட்டைத் தீப மங்கள ஜோதியிலே, பேயார் 'திருக் கண்டேன், பொன்மேனி கண்டேன்!' என்று குதூகலப் படுகிறார். மூவரும் தாங்கள் தேடிய மெய்ப்பொருளைக் கண்டு ஆனந்த பரவசமாகிறார்கள். இந்த அனுபவம் பாட்டாகப் பெருகுகிறது.

இவர்களில் ஒருவர் தம்மைப் 'பெருந் தமிழன், நல்லேன்' என்று சொல்லிக் கொள்கிறார். மூவருமே நல்ல தமிழர்கள், பெருந் தமிழர்கள்; 'பால் ஏய் தமிழர் (கறந்த பால்போல் கள்ளங் கவடற்றவர்கள்) என்று சொல்லிக் கொள்வதற்கும் சிறப்புரிமை வாய்ந்தவர்கள். 'மேலொரு பொருளும் இல்லா மெய்ப்பொருள்' காண வேண்டுமென்று தவித்துக் கொண்டிருந்தவர்கள் அல்லவா?

இம்மூவரும் இறைவன் என்ற மெய்ப் பொருளைத் தமிழ் விளக்கு ஏற்றிக் கண்டுகொண்ட இந்த அதிசயச் செய்தியையும், இதனால் திருமுனைப்பாடி என்ற அந்தப் பிரதேசத்துக்கு ஏற்பட்ட பாக்கியத்தையும், பாரதம் பாடிய வில்லிபுத்தூரரின் புதல்வரான வரந்தருவார் (வரதாசாரியார்) குறிப்பிடுகிறார் :

பாவரும் தமிழால் பேர்பெறு பனுவல்
பாவலர் பாதிநாள் இரவில்,
மூவரும் நெருங்கி மொழிவிளக்கேற்றி
முகுந்தனைத் தொழுத நன்னாடு

கதை மிகவும் பிரசித்தமானது ; சுவை நிரம்பியது. இதன் உட்பொருளோ சிந்திக்கச் சிந்திக்கப் புதுமை வாய்ந்தது, ஆழமானது; எனினும் மிகவும் தெளிவானது சுருங்கக் கூறினால், பாகவத சமதர்மத்தின் பரப்பையும் பேராழத்தையும் புலப்படுத்துவதுடன், இந்து தருமத்தின் மருமத்தையும் இதய விசாலத்தையும், நம் பண்பாட்டின் உயிர் நாடியையும்,—ஏன், இந்திய வரலாற்றின் பெரும் போக்கையுமே—இக்கதை சுட்டிக் காட்டுவது போலத் தோன்றுகிறது.

அந்த நட்ட நடுநிசியிலே, பரம சாதுக்களான பொய்கையாரும் பூதத்தாரும் பேயாரும் தங்கள் அனுபூதியில் கண்ட 'உண்மையையே அழகு' என்ற அந்தக் காட்சியைப் பாடத் தொடங்கிவிட்டார்கள். இப்பாவலர் மூவரையும் முதலாழ்வார்கள் என்கிறார்கள். முதலாழ்வார்களில் முதல்வர் பொய்கையார். இம் மூவரையும் 'செந்தமிழ் பாடுவார்' என்று கூறுவதுண்டு.

இவர்கள் தம் பாகவத இயக்கத்தின் அடிப்படையாகிய கடவுளுண்மையை எவ்வளவு தெளிவாகக் கண்டு காட்டுகிறார் என்பதை இப்போது நோக்குவோம் :

உளன் கண்டாய் ; நன்னெஞ்சே !
உத்தமன் ; என்றும்
உளன்கண்டாய் ; உள்ளுவார்
உள்ளத்து—உளன்கண்டாய் ;
வெள்ளத்தின் உள்ளானும்
வேங்கடத்து மேயானும்
உள்ளத்தின் உள்ளான் என்று
ஓர்.

இப்பாட்டில் மூன்று பெருங் கருத்துக்களைக் காணலாம். 1. உலகம் கோன் இல்லாத மந்தை அன்று. அவனுடைய அருளாட்சியின் நோக்கம் தேர்ந்த, தீர்ந்த, நன்மைதான். எனவே, அவன் உத்தமன், புருஷோத்தமன்; திருவுடன் காணப்படும் உத்தமன் என்பது குறிப்பு. 2. அவன் என்றும் உளன். 3. அவன் எங்கும் உளன். அன்று இருந்தான், இன்று இல்லை என்ற 'பெருமை' இறைவனுக்கு இல்லை! நித்திய சத்தியப் பொருளாகிய அவன், என்றும் இருப்பது போல், எங்கும் இருக்கிறான் என்பது கூர்ந்து நோக்கத் தக்கது.

இப்பெருமானை 'ஒண்தாமரையாள் கேள்வன்' (மகாலட்சுமியின் நாயகன்) என்று பொய்கையார் தெளிவாகக் கூறி, தாமரை மலர் சூரியனை நோக்குவது போல் தம் உணர்வு இவ் ஒருவனையே நோக்குகிறது என்கிறார். இப் பெருமானை நோக்கி, 'நீயும் பிராட்டியுமாகத் திருக் கோவலூரில் நெருக்கமானதொரு இடைகழியிலே வந்து நின்றருளினாய்!' என்று கூறித் தம் வாழ்க்கைத் துணுக்காகிய பெரும் பக்தியனுபவத்தையும் நினைவூட்டுகிறார்.

பூதத்தாழ்வாரும் திருமாலைத் தாயும் தந்தையுமாகக் காட்டுகிறார். மகாலட்சுமியைப் 'பனிமலராள்' என்கிறார். குளிர்ந்த தாமரைப் பூவில் உள்ள இப்பிராட்டியுடன் இசைந்து காட்சி தரும் மூர்த்தியைப் பனிமலராகிய தாமரைப் பூவால் அர்ச்சித்து வழிபட விரும்புகிறார். தம் உள்ளத்தை 'ஏரியாம் வண்ணம் இயற்றும்' இவர் பக்தியாகிய தாமரைப் பூவை ஏந்தி அடிபணிகிறார்.

இவருக்கும் பொய்கையாருக்கும் பேயாருக்கும் லட்சுமி-நாராயண மூர்த்தியைத் திருக்கோவலூரில் மழையும் மின்னலும் ஒரு முற்குறியாக நினைவூட்டியிருக்கலாம்.

பொலிந்துஇருண்ட கார்வானில்
மின்னேபோல் தோன்றி
மலிந்து திருஇருந்த
மார்பன்

என்று பேயாழ்வார் வாய்குளிர வருணிக்கிருர். எனினும் இந்த ஆழ்வாரின் பரந்த திருவுள்ளத்திலே லட்சுமி—நாராயண உருவம் மேலும் மேலும் வளர்ந்து விசுவரூபம் எடுப்பதையும் காண்கிறேம்.

இந்த மூர்த்தியின் நிறத்தைக் கருமை அல்லது நீலம் என்று சொன்னல் போதுமா? 'திருக்கண்டேன், பொன்மேனி கண்டேன்!' என்ருலும் போதாது எனக் கருதியவரைப் போல் இவர் பாடியிருப்பதையும் இப்போது பார்க்கலாம் :

' நிறம்வெளிது, செய்து,
பசிது,கரிது ' என்று
இறையுருவம் யாம்அறிவோம்
எண்ணில் !—நிறைவுடைய
நாமங்கை தானும்
நலம்புகழ வல்லளே,
பூமங்கை கேள்வன்
பொலிவு ?

மயிலைப் பேயாரின் இந்த ஸ்ரீ வைஷ்ணவத்திலே உலகளந்த மூர்த்தியின் அருள் உலக மக்களுக்கெல்லாம் பொது என்ற கருத்தை அழுத்தமாய்க் காண்கிறேம். 'பூமங்கை கேள்வன்' என்று இவர்காணும் அந்த அழகுச் சேர்த்தியிலே, எல்லா நிறங்களுக்கும் எல்லா இனங்களுக்கும் இடம் உண்டு, 'இப்படியன், இந்நிறத்தன், இவ்வண்ணத்தன், இவன் இறைவன்' என்று எழுதிக் காட்டொணுதே!' என்று

திருநாவுக்கரசர் கூறுவதையும் இங்கே நாம் நினைவூட்டிக் கொள்ளலாம்.

பேசுவார் எவ்வளவு
பேசுவார் அவ்வளவே !

என்று பேயாழ்வார் கூறியிருப்பதும் இந்த ஆழ்வாரின் இதய விசாலத்திற்குச் சான்றுதான்.

பொய்கையாழ்வாரின் பிரபந்தம் 'வையம் தகளியா' என்று தொடங்குகிறது. பூதத்தாழ்வாரின் பிரபந்தம் 'அன்பே தகளியா' என்று தொடங்குகிறது. பேயாழ்வாரின் பிரபந்தம் 'திருக்கண்டேன், பொன்மேனி கண்டேன்' என்று தொடங்குகிறது. இம்மூன்றும் அந்தாதிப் பிரபந்தங்கள். ஒவ்வொரு அந்தாதியிலும் நூறு பாடல்கள் காணப்படுகின்றன. பொய்கையாரின் அந்தாதியை 'இரண்டாம் திருவந்தாதி' என்றும் பேயாரின் அந்தாதியை மூன்றும் திருவந்தாதி என்றும் குறிப்பிடுகிறார்கள்.

முதல் திருவந்தாதியை 'எம் பொய்கைப் பிரான் மறையின் குருத்தின் (வேதாந்தத்தின்) பொருளையும் செந்தமிழ் தன்னையும் கூட்டி ஒன்றத் திரிந்து அன்று எரித்த திருவிளக்கு' என்று குறிப்பிடுகிறார், 'இராமானுச நூற்றந்தாதி' பாடிய திருவரங்கத்து அமுதனார். இவர் பூதத்தாழ்வாரின் பிரபந்தத்தை 'ஞானம் என்னும் நிறைவிளக்கு' என்கிறார். பேயாழ்வாரின் பிரபந்தத்தை 'மாமலராள் தன்னொடும் ஆயனைக் கண்டமை காட்டும் தமிழ்' என்று குறிப்பிட்டு, இந்த ஆழ்வாரை இத் 'தமிழ்த் தலைவன்' என்கிறார்.

பேயாழ்வாரின் சீடரான திருமழிசையாழ்வார் முதலாழ்வாரின் கொள்கைகளைத் தொடர்ந்து பரப்பி வந்தார். இவரைத் 'திருமழிசைப் பிரான்' என்றும் 'மழிசை வந்த

ஜோதி' என்றும் கூறுவதுண்டு. இவர் ஆதியில் பல்வேறு சமயக் கொள்கைகளையும் ஆராய்ந்து, வாதப் போர்களில் எத்தகைய கொள்கைகளையும் வெட்டி வீழ்த்தி வெற்றி பெற வேண்டும் என்று துடித்துக் கொண்டிருந்தாராம். இக்கத்தியும் தாமுமாய்த் திக்குவிஜயம் செய்துகொண்டே சஞ்சாரம் செய்தார் என்றும், அந்த யாத்திரையில்தான் பேயாழ்வாரைச் சந்தித்தார் என்றும் குருபரம்பரைக் கதைகள் தெரிவிக்கின்றன.

சென்னைக்கு அருகிலுள்ள திருமழிசையில் தோன்றிய இவர் பல இடங்களில் சஞ்சரித்து வெற்றி கண்டபின், மயிலாப்பூர் வழியாக வந்து கொண்டிருந்தார். வழியில் பேயாழ்வாரின் அழகிய நந்தவனத்தைக் கண்ணுற்றார். ஆனால் இவரைக் கண்டதும் அவர் ஏன் அப்படித் துளசிச் செடிகளையும் பூஞ்செடிகளையும் வேரோடு பறிக்கிறார்? ஏன் அவசர அவசரமாய்த் தலைகீழாக நட்டுவைக்கிறார்? பைத்தியமா? திருமழிசையார் திகைக்கிறார்.

பேயாழ்வார் அந்தச் செடிகளுக்குத் தண்ணீர் வார்க்கவும் புறப்பட்டுவிட்டாரே! நெருங்கி வந்து பார்க்கிறார் திக்குவிஜயம் செய்துவரும் திருமழிசையார். பேயாழ்வாரின் கையிலுள்ள அந்த மண் குடத்தில்தான் எத்தனை ஓட்டைகள்! தண்ணீர் முழுவதும் ஒழுகிப் போகிறது; செடிகளுக்கு ஒருசொட்டு நீரும் வந்தபாடில்லை. 'இப்படியும் ஒரு கொள்கையா? இதுவோ, சுவாமி! உம்முடைய பாகவத தர்மம்?' என்று சிரிக்கிறார் திருமழிசையார்.

குனிந்த தலை நிமிர்கிறது கம்பீரமாக. வசீகர ஒளி வாய்த்த கண்கள் ஊடுருவிப் பார்க்கின்றன. 'ஆஹா, என்ன தேஜஸ்!' என்று பிரமிக்கிறார் திருமழிசையார், அமைதியாகவும் உறுதியாகவும் பேசுகிறார் பேயாழ்வார்.

'ஸ்ரீமானுகிய நாராயணனுக்கு ஆட்பட்டு அவனை யொழிந்தக் கிடைத்திருக்கும் வாயைக்கொண்டு வீண்வாதம் செய்து பொழுது போக்குகிறீரே, இந்தப் பரிதாப நிலைக்கு அறிகுறிதான் இப்போது இங்கே நடக்கும் இந்த விபரீத நந்தவனப் பணி!' என்று இடித்துரைக்கிருர்.

திருமழிசையாழ்வாரைப் 'பக்திஸாரர்' என்றும் கூறுவதுண்டு. இவர் தம்மை,

குலங்களாய ஈரிரண்டில்
ஒன்றிலும் பிறந்திலேன்

என்று தம் பிரபந்தத்திலே அறிமுகப்படுத்திக்கொள்கிருர். திருமழிசையில் பார்க்கவர் என்ற ஒரு முனிவருக்குப் பிறந்து, பிரம்பு அறுத்துக் கூடை முடைந்து ஜீவனம் செய்த குறவன் ஒருவனுல் இவர் வளர்க்கப்பட்டார் என்று கதைகள் வழங்குகின்றன. பிரப்பங்கூடை முடைவதை இந்த ஆழ்வாரும் தம் தொழிலாகக் கொண்டிருந்தார் என்று வடிவழகிய நம்பிதாசர் தம் குருபரம்பரை வரலாற்றில் கூறியுள்ளார். 'சொல்லினும் தொழிற்கணும்' லட்சுமி நாராயணமூர்த்தியின் திருவடிகளைத் தம் உள்ளம் பிரிவில்லாது தழுவியிருந்ததாக இவரே பாடியிருக்கிருர்.

இவர் தம்முடைய தெய்வத்தைப் 'பொன்பாவை கேள்வா!' என்று அழைக்கிருர், இந்த லட்சுமி-நாராயணமூர்த்தியின் சொருபத்தை இவர் யோகதிருஷ்டியால் அறிந்துகொள்ள முயன்ருராம். அதற்காக அந்த நாளில் மயிலாப்பூரின் பகுதியாக இருந்த திருவல்லிக்கேணியில் யோகத்தில் ஈடுபட்டிருந்தாராம். இந்த 'யோகம்' குறித்து இவர் வாக்கிலேயே ஒரு குறிப்பைக் காணலாம் என்று தோன்றுகிறது.

'திருமாலே! உன்னைக் குறித்து நான் சிந்தித்துப் பார்த்தேன், எழுதிப் பார்த்தேன்' என்று பொருள்படப் பாடிவிட்டு,

**வாசித்தும், கேட்டும்**
**வணங்கி, வழிபட்டும்,**
**பூசித்தும், போக்கினேன்**
**போது**

என்று முடிக்கிறார் திருமழிசையார்.

இந்த வாக்கில் எட்டு அம்சங்களைப் பார்க்கிறோம்: 1) சிந்தித்து ஓதுதல், 2) எழுதுதல், 3) வாசித்தல், 4) கேட்டல், 5) வணங்குதல், 6) வழிபடுதல், 7) பூஜித்தல், 8) இவற்றையே பொழுது போக்காகக் கொள்ளுதல். இந்த எட்டு அங்கங்களும் பக்திஸாரர் என்ற இந்த ஆழ்வார் தம் பக்திப் பெருநெறியிலே மேற்கொண்ட அஷ்டாங்க யோகம் எனலாம்.

திருமழிசையாழ்வாரைப் பற்றி வழங்கும் கதைகளில் ஒன்று தமிழால் அற்புதம் விளைந்ததைக் குறிப்பிடுகிறது. இவர் பொய்கையாழ்வார் தோன்றிய காஞ்சிமா நகரப் பகுதியான திருவெஃகா என்ற பழம்புகழ் வாய்ந்த கோயிலைச் சேர்ந்த பொய்கைக் கரையில் ஒரு சமயம் ஆசிரமம் அமைத்துக்கொண்டு, கணிகண்ணன் என்ற சீடனுடன் தங்கியிருந்தார். அப்போது அரசனாக இருந்த பல்லவன் கணிகண்ணனை நோக்கி, 'நீ இந்த நாட்டைவிட்டுப் போய் விடவேண்டும்' என்று கோபத்துடன் கட்டளையிட்டான்.

கனிகண்ணன் போகவும், ஆழ்வாரும் தொடர்ந்தார். 'நீயும் உன் பாய் சுருட்டிக்கொள்' என்று ஆழ்வார் பெருமானை நோக்கிச் சொல்லவே, சயனக்கோலத்திலிருந்த திருவெஃகா எம்பெருமானும் தன் பாம்பணையைச் சுருட்டிக்

கொண்டு திருமகளுடன் பின்தொடர்ந்தானும். செந்தமிழ்ப் புலவராகிய தாம் போவதாகத் திருமழிசையாழ்வார் சொன்னதும், அவரைத் தொடர்ந்து புறப்பட்ட பெருமாளை இன்றும் 'சொன்னவண்ணம் செய்த பெருமாள்' என்று பக்தர்கள் போற்றுகிறார்கள்,

இக்கதை வைணவ உள்ளங்களை மட்டும் ஆட்கொண்டது என்பதில்லை; தமிழ்ப் பெருமக்களின் இதயத்தையே வசீகரித்துவிட்டது. தமிழ் வடமொழிகளோடு இந்துஸ்தானி மொழியும் கற்று வடஇந்தியாவில் சைவ சித்தாந்தப் பிரசாரம் செய்த குமரகுருபர அடிகளும் இக்கதையில் ஈடுபட்டு, பைந்தமிழ்ப்பின்சென்ற பச்சைப் பசுங்கொண்டலே!' என்று திருமாலைப் பாடியிருக்கிறார்.

ஆனால் தமிழால் விளைந்த அற்புதம் இதுதான் என்பதில்லை. தமிழின் விளைவுதான் தம்முடைய பக்தியனுபவம் எல்லாம் என்று திருமழிசையாழ்வாரே ஒப்புக்கொண்டிருக்கிறார்.

நற்றமிழை வித்தி, என்
உள்ளத்தை நீவிளைத்தாய்,
கற்றமொழி யாகிக்
கலந்து

என்று இவர் பகவானை நோக்கிக் கூறுவதைக் கேளுங்கள். தாய்மொழிக் கல்வியால்தான் உள்ளத்தை உள்ளபடியே விளைவித்துக்கொள்ளமுடியும் என்பதற்கு இனி வேறொரு சாட்சியும் வேண்டுமா?

முதலாழ்வார்களின் ஸ்ரீ வைஷ்ணவம் திருமழிசையாழ்வாரின் வாக்கிலே ஒரு புதிய சக்தியும் வேகமும் பெற்றது என்பதற்கு உதாரணமாகப் பின்வரும் பாட்டைப் பார்க்கலாம்.

இன்ருக, நானேயே
ஆக, இனிச்சிறிது
நின்ருக, நின் அருள்
என்பாலதே; - நன்ருக
நான் உன்னை அன்றி
இலேன் கண்டாய்; நாரணனே!
நீஎன்னை அன்றி
இலை.

இறைவனை நோக்கிப் பக்தர்கள், 'நான் உன்னை அன்றி இல்லை' என்று சாதாரணமாய்க் கூறுவதுண்டு. ஆனல் அந்தக் கொள்கையின் இன்றியமையாத பகுதியாக - அதே நாணயத்தின் மறுபக்கமாக-'நாரணனே! நீ என்னை அன்றி இலை' என்று கூறும் துணிச்சலைப் பாருங்கள்! இப்படி அடியவர்களுக்கு ஓர் உரிமைப் பெருஞ் சாசனத்தை அளிக்கும் இந்த வாக்கு ஆழ்ந்த சிந்தனைக்கு உரியது.

இந்த நாரணனை, இந்தப் 'பொன்பாவை கேள்வ'னை அன்புப் பெருநெறியில் காணமுடியும் என்கிருர்.

அன்பில் அன்றி ஆழியானை
யாவர்காண வல்லரே ?

என்ற வினவில் தொண்டர் அனைவர்க்கும் உரிய 'ராஜவழி' வற்புறுத்தப்படுகிறது.

அன்பாவாய், ஆரமுதம்
ஆவாய், அடியேனுக்கு
இன்பாவாய், எல்லாமும
நீ ஆவாய்

என்று இவர் கூறுவதும் கவனிக்கத்தக்கது.

பொய்கையார், பூதத்தார், குடமூக்கில் - பகவர் (திருமழிசையார்), காரைக்கால் அம்மையார், திருமூலர்

ஆகிய ஐவரையும் முக்காலமும் உணர்ந்த முனிவர்களாகக் குறிப்பிடுகிறது யாப்பருங்கலவிருத்தி என்ற உரை. திருமழிசையார் கடைசியாகக் கும்பகோணத்திலேயே தங்கிவிட்டார்; எனவே இவரைக் குடமூக்கில் பகவர் என்று கூறுவதும் உண்டு. கும்பகோணத்திற்குக் குடமூக்கு, குடமூக்கில் என்ற பெயர்கள் உண்டு.

ஸ்ரீ வேதாந்த தேசிகர் தமது 'பிரபந்தசார' த்தில் ஆழ்வார்கள் தோன்றிய அடைவு அல்லது முறைமையைக் கூறும்போது முதலாழ்வார்களுக்கும் திருமழிசையாருக்கும் பின் நம்மாழ்வாரின் தோற்றத்தைக் குறிப்பிடுகிருர். பிறகு இவரது சீடரான மதுரகவியைக் குறிப்பிடுகிருர். அப்பால் குலசேகரரையும் பெரியாழ்வாரையும் ஆண்டாளை யும் தொண்டரடிப் பொடியாழ்வாரையும் திருப்பாணுழ் வாரையும் கடைசியாகத் திருமங்கையாழ்வாரையும் குறிப் பிடுகிருர்.

மணவாளமாமுனிகளும் தம் 'உபதேச ரத்தினமாலை' யில் இந்த முறையைத்தான் பின்பற்றியிருக்கிருர். இவர் மதுரகவியாழ்வாரையும் ஆண்டாளையும் குறிப்பிடாமல் பதின்மரின் தோற்றத்தைக் கூறுகிருர். தற்கால ஆராய்ச்சிக் காரர்களுக்கு ஆழ்வார்கள் தோன்றிய அடைவு குறித்துக் கருத்து வேற்றுமைகள் உண்டு.

நம்மாழ்வாருக்கு மற்றை ஆழ்வார்கள் எல்லாம் அவயங்கள் என்றும், நம்மாழ்வாரே அவயவி என்றும் சொல்லுகிருர்கள்.

சித்து அசித்தொடு ஈசன்என்று
செப்புகின்ற மூவகைத்
தத்துவத்தின் முடிவுகண்ட
சதுர்மறைப் புரோகிதன்

என்று பாரதம் பாடிய வில்லிபுத்தூரர் நம்மாழ்வாரைக் குறிப்பிடுகிறார்.

விஷ்ணு என்ற சொல்லுக்கே எங்கும் பரந்திருக்கும் பரம்பொருள் என்று பொருள். எங்கும் அந்தர்யாமியாக இருக்கும் திருமாலின் தொடர்பு பெறாத உலகப் பகுதியே இருக்க முடியாதல்லவா? இந்த விஷ்ணு சம்பந்தஞானம் உள்ளவரே உண்மையான வைணவர் என்ற பரந்த, சிறந்த ஸ்ரீ வைணவத்தை நம்மாழ்வார் பாசுரங்களில் சிறப்பாகக் காண்கிறோம். எங்கும் நிறைந்த விஷ்ணுவை வழிபடும் சமயத்திற்கு உரிய வேதத்தமிழே நம்மாழ்வாரின் திருவாய்மொழி.

வாய்மொழி என்ற சொல் வேதம் என்ற பொருளில் பரிபாடலில் வருகிறது. 'வாய்மொழி முதல்வன்' என்று திருமாலைக் குறிப்பிடுகிறது பரிபாடல் திருமாலின் சிறப்புக்கள் பலவற்றையும் ஸாமவேதம் எடுத்துக்கூறுவதாகவும் பரிபாடல் தெரிவிக்கிறது. நம்மாழ்வாரின் பிரபந்தங்களிலும் பொதுவாக எல்லா ஆழ்வார்களுடைய பிரபந்தங்களிலும் சிகரமாக உள்ளது திருவாய்மொழி என்பது வைணவர் கொள்கை. பரிபாடலில் வேதம் என்ற பொருளில் வரும் வாய்மொழி என்பதையே பின்னாளில் பக்தர்கள் திருவாய்மொழிக்குச் சூட்டியிருக்கக்கூடும். இப் பிரபந்தத்தைத் திருவாய்மொழி என்று நம்மாழ்வார் குறிப்பிடவில்லை.

'திராவிட வேத ஸாகரம்' என்று ஆசாரியருள் முதல்வராகிய நாதமுனிகள் திருவாய்மொழியைக் குறிப்பிடுகிறார். பட்டர் என்ற ஆசாரியர் இதைத் 'தமிழ் மறைகள் ஆயிரம்' என்பர். திருவரங்கத்து அமுதனார் 'செந்தமிழ் ஆரணம்' என்பர். வேதமாகிய பாற்கடலைத் தமது நாவினால் கடைந்து நம்மாழ்வார் திருவாய்மொழி என்ற சுவையமுதமாக அடியார்களுக்கெல்லாம் தந்தருளினார் என்பது பிள்ளைப் பெருமாளையங்காரின் கருத்து. திருவாய்மொழி திராவிட உபநிஷதம் என்றும் கூறப்படுகிறது.

கௌரங்கர் என்ற ஸ்ரீ கிருஷ்ண சைதன்யர் ஆழ்வார் திருநகரிக்கு வந்திருந்து திருவாய்மொழிப் பிரதி ஒன்றை எடுத்துச் சென்றிருக்க வேண்டும் என்று ஸ்ரீ டி. என். கங்குலி என்ற வங்காள வரலாற்றுப் புலவர் தாம் எழுதிய 'சைதன்யர்: வாழ்க்கை வரலாற்றில்' தெரிவிக்கிறார். திருவாய்மொழி திராவிட ப்ரம்ம ஸம்ஹிதை என்ற பெயராலும் சைதன்யர் காலத்தில் அறியப்பட்டிருந்தது என்பது கங்குலியின் கருத்து. இதே பெயரால் பட்டர் என்ற தென்னிந்திய வைணவ ஆசாரியரும் தமது 'குணரத்ன கோச'த்தில் திருவாய் மொழியைக் குறித்திருப்பது கவனிக்கத்தக்கது.

திருவாய்மொழிக்கு அருமையான வியாக்கியானங்கள் உண்டு; வியாக்கியான சக்கரவர்த்தி என்று இன்றைய அறிஞர்களாலும் மதிக்கப்பெற்றிருக்கும் பெரியவாச்சான் பிள்ளையின் வியாக்கியானம் பிரசித்தமானது. திருவாய் மொழியிலுள்ள எந்த ஒரு பாட்டை ஓதி உணர்ந்து ஒழுகினாலும் ஒருவனுக்கு வேண்டிய நன்மைகளெல்லாம் கிடைக்கும் என்ற கருத்தைப் பெரியவாச்சான் பிள்ளை தம் வியாக்கியானத்திலே கூறியுள்ளார். 'ஈடு' வியாக்கியானம்

மிகவும் பிரசித்தமானது. ஈட்டின் தமிழாக்கம் சென்னைப் பல்கலைக் கழகத்தின் ஆதரவில் பகுதி பகுதியாக வெளி வந்திருக்கிறது. இந்த வியாக்கியானங்கள் 'பகவத் விஷயம்' என்று சொல்லப்படுகின்றன.

திருவாய்மொழியும் நம்மாழ்வாரின் மற்றப் பிரபந்தங் களும் இவரை ஸ்ரீ வைணவ சிகர ஜோதியாகக் காட்டுகின் றன. உள்ளுறை அழகனாகிய பகவானை தம் உள்ளத்தி லிருந்து இன்பமாரியாகத் தன்னை வெளியிட்டுக் கொண் டான் என்பது நம்மாழ்வாரின் நினைவும் நம்பிக்கையுமா கும்; இதற்கு இவர் வாக்கிலேயே சான்றுகள் காணலாம். சீடரான மதுரகவி இப்பாசுரங்களை நாவினால் ஓதி ஓதித் தாம் இன்பம் அனுபவித்ததாகப் பாடியிருக்கிறார். இதுவே நல்வழி. தொல்வழியும் இதுவே என்பர் வேதாந்த தேசிகர்.

தொல்வழி என்பது வேத வேதாந்தங்கள் காட்டும் வழி. முக்கிய அம்சங்களில் 'அருமறைகள் தமிழ் செய்த' ஆழ்வார் காட்டும் நல்வழியும் அந்த வேத முனிவர்களின் வழிதான் என்பது தேசிகர் கருத்து. நம்மாழ்வார் காட்டிய வழிதான் மதுரகவியாழ்வார் மூலமாக நமக்குக் கிடைத்தி ருக்கிறது என்கிறார். துணிவுடன் அந்தத் தொல்வழியும் இந்த நல்வழியும் ஒன்றே என நம்பித் துன்பம் துடைத்து நல்லின்பப் பெரு வாழ்வு வாழும் முறையே ஸ்ரீ வைணவம் என்ற உபய வேதாந்த சமயம் என்பது வேதாந்த தேசிகர் முதலான ஸ்ரீ வைணவ ஞான தேசிகர்களின் திருவுள்ளம்,

ஸ்ரீ வைணவத்தின் அடிப்படைக் கொள்கைகளெல்லாம் திருவாய் மொழியில் தெளிவாகக் காணப்படுகின்றன. பொதுவாக ஆழ்வார்களின்

செய்ய தமிழ்* மாலைகள் நாம்
　　தெளிய ஓதித்
தெளியாத மறைநிலங்கள்
　　தெளிகின் றோமே

என்று வேதாந்த தேசிகர் 'அதிகார சங்கிரக' த்தின் தொடக்கத்தில் கூறி, அடுத்த பாசுரத்திலேயே 'அருமறைகள் தமிழ் செய்தான் தாளே கொண்டு' மதுரகவி தெள்ளத்தெளிந்த நிலையில் நல்வழி காட்டியிருப்பதை வற்புறுத்தியிருக்கிறார்.

தொழுகிற நெஞ்சு நல்ல நெஞ்சாயிருக்கவேண்டும்; அப்போதுதான் நம்பிக்கை நன்னம்பிக்கையாகும்; உண்மையாகும்.

நன்னெஞ்சே ! நம்பெருமான்
　　நமக்கு அருள்தான் செய்வானே

என்பது இவர் திருவாக்கு. இத்தகைய தூய நம்பிக்கையுடன் பகவானையே சாதனமாகவும் பயனாகவும் கொண்டு வாழ்க்கை நடத்தவேண்டும் என்பது இவர் திருவுள்ளம்.

'காயம்பட்ட ஒருவனைக் கண்டதும் நான் அனுதாபப் படுவதில்லை' என்றார் வால்ட் விட்மன் என்ற பேரறிஞர். 'ஐயோ! அவ்வளவு கடின இதயமா?' என்று திகைப்படைகிறோமல்லவா? அந்தப் பேரறிஞரோ, 'நான் அனுதாபப்படுவதில்லை, ஆனால் நானே அந்தக் காயம்பட்டவனே ஆகிவிடுகிறேன்!' என்று கூறி முடித்தாராம். காயம் அடைந்தவன் அனுபவித்த துன்பம் அப்படி அனுபவிக்கப்பட்டதாம் அவர்

---

* 'செய்யதமிழ் மறை அனைத்தும்' என்பது ஒரு பாட பேதம். இது கவித்திறம் துரைச்சாமி மூப்பனார் முதற்பதிப்பில் காணப்படுகிறது.

நெஞ்சிலே. அந்த விதமாகப் பிறர் துன்பங்களை அனுபவித்து அவர்களுக்காக மன்றாடப் பிறந்த ஞான தேசிகர் நம்மாழ்வார் என்ற கருத்துடன் பெரியவாச்சான் பிள்ளை என்ற பேரறிஞர், 'பராநர்த்தம் (பிறர் துன்பம்) நெஞ்சிலே படுகையாலே நாட்டுக்காகத் தாம் மன்றாடுகிறார்' என்று இவரைக் குறித்துக் கூறியுள்ளார்.

அகத்து உறையும் அழகனை அகக் கோயிலிலும் புறக் கோயிலிலும் வழிபடும் நம்மாழ்வார் என்ற ஞானசௌந்தரிய சொரூபத்தைக் காண்கிறோம்.

முடிச்சோதியாய் உனது
முகச்சோதி மலர்ந்ததுவோ?
அடிச்சோதி நீநின்ற
தாமரையாய் அலர்ந்ததுவோ?

என்று அழகனை வழிபடும் ஞான தேசிகரின் முகச் சோதியும் இப்பாட்டிலிருந்தே நமக்கு ஒருவாறு புலனாவது போலத் தோன்றுகிறது.

மோன மாகிய வடிவமும் மார்பமும்
முத்திரைத் திருக்கையும்
ஞான தேசிகன் சரணதா மரையும்என்
நயனம்விட் டகலாவே!

என்று நம்மாழ்வாரைப் பாடியிருக்கும் பக்தர்வாக்கு இவர் பாசுரங்களில் ஊறிக் கிடந்து உருவாகியதுதான்.

நம்மாழ்வாருக்கும் மதுரகவிகளுக்கும் பின் குலசேகரரைக் குறிப்பிடுவது வைணவ மரபு. முடிசூடிய அரசர் அடிசூடிய தொண்டக்குல அரசராகப் பரிணமித்த அற்புதம்

தான் குலசேகரரின் வாழ்க்கைக் கதை. திருவரங்கம் போக வேண்டும் என்ற ஆசை இந்தச் சேரமன்னரை ஆட் கொண்டது என்றும், அந்த யாத்திரையை இவரும் 'நாளை, நாளை' என்று நந்தனரைப்போல் மாற்றிக் கொண்டே வந்ததும், - திருவரங்கத்து அடியார்களின் கூட்டுறவால் இவர் பரம பாகவதரானதும், இவரது நம்பிக்கை பயங்கர சோதனைகளுக்கு உட்பட்டதும், அந்தச் சோதனைகளில் பக்தி வெற்றி கண்டதும், குருபரம்பரைக் கதைகளின் வாயிலாகப் பலருள்ளங்களையும் வசீகரித்திருக்கின்றன.

இவர் தாம் கண்ட பாதையைத் 'தீதில் நன்னெறி' என்று குறிப்பிடுகிறார். இந்த நெறியிலே இவர் கண்ட மன அமைதியும் பக்திக் காதலும், வழிகாட்டிய தொண்டக் குலத்தின் மீது நன்றியும், பின்வரும் பாட்டில் பிரஸ்தாபிக் கப் படுகின்றன :

ஆதி அந்தம் அனந்தம் அற்புதம்
ஆன வானவர் தம்பிரான்
பாத மாமலர் சூடும் பத்தி
இலாத பாவிகள் உய்ந்திடத்
தீதில் நன்னெறி காட்டி, எங்கும்
திரிந்து அரங்கன்எம் மானுக்கே
காதல்செய் தொண்டர்க்கு எப் பிறப்பினும்
காதல் செய்யும் என்நெஞ்சமே.

பாகவத ராஜதானி நகரமாய்க் கருதப்பெறும் திருவரங்கத்தில் பக்தர்களும் பாகவதர்களும் கூடியிருந்து பக்தி பண்ணுவதுண்டு. இவர்கள் பக்தி மத உண்மைகளை நாலுதிசைகளிலும் பரப்பிக் கொண்டிருந்தார்கள். இத்த கைய நன்னெறியாளர்களில் பெரியாழ்வாரும் ஒருவரா

கிருர். திருக்கோட்டியூரைச் சேர்ந்த செல்வ நம்பியையும் 'நீதில் நன்னெறி' காட்டியவர்களில் ஒருவராக இவர் குறிப்பிடுவதை உய்த்துணர்ந்து கொள்ளலாம்.

பெரியாழ்வாரின் கதை வடிவழகிய நம்பிதாசரின் குருபரம்பரைப் பாடல்களில் வசிகரமாய்ச் சொல்லப்படுகிறது. நந்தவன நிழலிலே பூமாலையும் பாமாலையும் புனைந்து கொண்டிருந்த மேதையைக் காண்கிருேம்.

'பூச்சூட்ட வாராய்' என்று கண்ணனை யசோதை அழைக்கும்போது, இவர் பயிரிட்ட பூச்செடிகளிலிருந்து செண்பகப்பூ, மல்லிகைப்பூ, பாதிரிப்பூ, செங்கழுநீர்ப்பூ முதலியவற்றைக் கொய்து வைத்துக்கொண்டே அந்தத்தாய் கொஞ்சுவது போலத் தோன்றுகிறது. ஏன், இவர் தாமே தாயாகிப் பகவானை அப்படி வளர்த்துக் கொண்டிருக்கிருர்!

பெரியாழ்வாரின் பல பாடல்களில் இவரது நந்தவனத்தின் சாயை படிந்துகிடப்பதைக் காணலாம் கோவர்த்தனத்தில் கொடிமுல்லைகள் குரவமரத்திலே உறங்குகின்றன. கண்ணன் வேணுகானம் செய்யும்போது மரங்களும் உருகி மதுதாரைபாயத் தம் பூங்கிளைகளிலிருந்து பூக்களைச் சொரிகின்றன.

சீதைக்கு அடையாளம் சொல்லும்போது அனுமன்,

அல்லியம்பூ மலர்க்கோதாய்!

என்று அழைக்கிருன், 'மலர்க்கண்மடமானே', என்கிருன். வீரராமனைச் சீதை, 'உன்னை இப்போது கட்டிவைக்கிறேன் பார்!' என்று சொல்லித் தனியிடத்தில் 'மல்லிகை மாமாலை கொண்டு' கட்டிவைத்ததையும் அனுமன் அடையாளமாகக் குறிப்பிடுகிருன்,

நந்தவன நிழலில் கண்ட பெரியாரைப் பாண்டியனது முத்துக்குடைநிழலிலும் பார்க்கிறோம். இவர் வாதப்போரில் வெற்றிபெற்றுப் பாண்டியனைச் சிட்டுக்கிக் கொள்கிறார். அவனுக்கு, அவன் முத்துக்குடை நிழலிலேயே பக்திப்பூங்காவின் குளிர் நிழலையும் காட்டுகிறார். வெற்றிக் கொண்டாட்டத்தின் பகுதியான நகர்வலத்திலே பல்லாண்டு பாடிப் பகவானை வாழ்த்துகிறார். திருப்பல்லாண்டு பாசுரங்களிலேயே இவரது வாழ்க்கைத் தத்துவத்தின் அடிப்படைக் கொள்கைகளையும் காண்கிறோம்.

பகவானைத் தாமே தாயாகி வளர்த்தவரல்லவா ?— இந்தச் செல்லப் பிள்ளையின் பிறப்பையும், அந்த ஆதி ஸ்ரீ ஜயந்தி விழாவை ஆயர்பாடி கொண்டாடியதையும் பாடியிருக்கிறார். குலசேகரரை ராமகதை பெரிதும் வசீகரித்தது போல், பெரியாழ்வாரைக் கண்ணன் கதைகள் பெரிதும் வசீகரிக்கின்றன. இந்தக் கதையுலகில் இவர் செய்த யாத்திரைகளெல்லாம் ஜீவயாத்திரையின் அதிமுக்கியமான பகுதிகளாகிவிடுகின்றன. கண்ணன் - கதைத் தோப்பிலும் இவர் தம் நந்தவனத்தில் வாழ்ந்தது போலவே வாழ்ந்து வந்தார். இவர் இரண்டு குழந்தைகளை வளர்த்திருக்கிறார்; கண்ணன் ஒரு குழந்தை; ஆண்டாள் ஒரு குழந்தை. நந்தவனத்தின் நிழலிலே கண்டெடுத்து வளர்த்த கோதை, இவர் மனோபாவத்தில் வளர்த்த கண்ணனைக் காதலிக்கின்றாள்; பொருத்தம்தான். 'எங்கள் குலத்து இன்னமுதே!' என்று குலசேகரர் ராமனிடம் உறவு கொண்டாடியதுபோல பெரியாழ்வாரின் தாயுள்ளமும் 'எங்கள் குடிக்கு அரசே!' என்று கண்ணனிடம் உறவு கொண்டாடுகிறதல்லவா ?

இவரது வேணு கோபாலன் விரித்த அமுத கீதவலையில் கோபிகைகளுடன் தெய்வப்பெண்களும் அகப்பட்டுக்கொண்டு

ஆனந்தக் கண்ணீர் வடிக்கிறார்கள். தும்புருவும் நாரதரும் சிக்கிக்கொண்டு தங்கள் வீணைகளை நழுவவிடுகிறார்கள். கந்தர்வ இசைகாரரும் தங்கள் இசையை மறந்துவிடுகிறார் கள். தேவாமிர்தத்தை மறந்துவிடுகிறார்கள் தேவர்கள். உயிர்க்குலம் ஒன்றாகிப் பேதங்களை மறந்துவிடுகிறது. இயற்கையும் தன்னை மறந்து மோகித்துப் போகிறது. குழ லின் கீதத்திலே ஒரு புதிய கீதையைக் காட்டுகிறார் பெரியாழ்வார்!.

## நோன்பா? நாடகமா?

கோதையின் காதல் வெள்ளமே இவள் திருமொழி. இவள் காதலன் உலகில் இல்லாத புருஷோத்தமன்; அல்லல் விளைத்த பெருமா'னும் 'ஆயர்பாடிக்கு அணிவிளக்கு' மாகிய கண்ணபிரான். கோதை ஆண்டாள், சூடிக்கொடுத்த சுடர்க்கொடி என்ற பெயர்களிலிலேயே இவளது லட்சியக் காதலைக் காண்கிறோம். நந்தவனத்தின் பச்சைப்பசுந்துழாய்ச் செடிகளுக்கிடையே காணப்பட்ட கருணைக்கொழுந்து, பெரி யாழ்வாரின் பூமாலைகளுக்கும் பாமாலைகளுக்கும் இடையே ஞானக்கொழுந்தாய் வளர்ந்து, இவரது கருணை முகிலுக்கே காணிக்கையாகிறாள். இக் காதலின் வளர்ச்சியை இவள் வாக்கிலே காண்பதுடன், ஆண்டாள் கலியாணத்தின் இரகசி யத்தையும் பாசுரங்களிடையே இவள் எழுதிக்காட்டும் தற் சரிதத்தில் கண்டுகொள்ளலாம் என்று தோன்றுகிறது.

ஆண்டாளின் திருப்பாவை மிகமிகப் பிரசித்தமானது. ஆண்டாளைத் திருப்பாவைச்செல்வியார் என்று சிறப்பாகக் குறிப்பிடுவதுண்டு. 'நோன்பா, நாடகமா?' என்று வியக்கும் படி அமைந்திருக்கிறது இப்பிரபந்தம். நோன்பையும் நியமங் களையும் நினைத்துப்பார்க்கும்முன்பே நாடகப்தொடங்குகிறது.

வில்லிபுத்தூரே ஆய்ப்பாடியாகிறது. நந்தகோபனின் திரு மாளிகையாகிறது. பெருமாளின் சந்நிதி, ஆண்டாள் கோபியருள் ஒருத்தியாகி விடுகிருள். இனிக் கிருஷ்ண சரித நாடகத்தின் பகுதியாகிவிடுகிறது இவள் தற்சரிதம்.

ஆண்டாளின் கதைகளும் பாசுரக் கருத்துக்களும் வட நாட்டிலும் பரவியிருக்க வேண்டும் என்பதற்கு மீராபாயின் கதைகளும் பாடல்களும் கொள்கைகளும் சான்று தருகின் றன. ஆண்டாளுக்குப் பல நூற்ருண்டுகளுக்குப் பின் தோன்றியவள் மீராபாய். ஆண்டாளைப் போல் மீராவும் கண்ணனையே காதலனுகக் கொண்டவள். ஆனல் மீரா வுக்கு மூர்க்கனும் மூடனும் அவநம்பிக்கை உள்ளவனுமாகிய கணவன் இருந்தான் மீராவின் உள்ளமோ கண்ணனின் திருவிளையாடல்களிலேயே ஈடுபட்டிருந்தது; இவளும் தன்னை ஆய்ப்பாடிச் சிறுமிகளில் ஒருத்தி என்றே பாவிக்க லானுள். ஆண்டாள் தன் கனுக் கல்யாணம் குறித்துத் தோழியிடம் தெரிவிக்கிருளல்லவா?- மீராவும் இத்தகைய கனுக் கண்டு தன் தாயிடம் சொல்லுகிருளாம்.

பெரியாழ்வாருக்குப் பின் 'அன்பர் தாள்தூளி' என்று மணவாள மாமுனிகளும், பெரியாழ்வாருக்கும் ஆண்டா ளுக்கும் பின் 'துன்னு புகழ்த் தொண்டர் அடிப்பொடி' என்று வேதாந்த தேசிகரும், தொண்டரடிப் பெரியாழ் வாரைக் குறிப்பிடுகிருர்கள். இவரும் பெரியாழ்வாரையும் பேயாழ்வாரையும் போல் நந்தவன கைங்கரியத்தில ஈடுபட் டிருந்தார். திருமழிசையாழ்வார் தம் வாழ்க்கையின் இறுதிப் பகுதியைக் கழித்த கும்பகோணத்திற்கு அருகில் உள்ள திருமண்டங்குடியில் இந்த ஆழ்வார் தோன்றினுர். அடியார் களிடம் தமக்குள்ள பக்தியால் இவர் 'விப்ர நாராயணன்' என்ற தம் இயற்பெயரை விட்டுத் 'தொண்டர் அடிப்பொடி' என்றே பெயர் வைத்துக்கொண்டார்.

தொண்டர் அடிப்பொடி ஆழ்வாரின் கைங்கரியத் திருக் கோலத்தையும், அரங்கநாதன் திருவுருவில் இவருக்குள்ள ஈடுபாட்டையும், இறைவனது திருப்பெயரின் மகிமையில் இவருக்குள்ள பெரு நம்பிக்கையையும், இவரது கவிச்சுவை யையும் நகைச்சுவையையும், இவரது கவிதைப் பூங்காவில், முகமுகமாய்க் காண்பதுபோல் கண்டுகொள்கிறோம்.

பகவானுக்குத் திருப்பள்ளியெழுச்சி பாடியவர் இவரே எனவே இவரைத் 'துயில் எழுப்பிய தொண்டர்' என்றும் கூறுவதுண்டு.

அரங்கத்தம்மா பள்ளி
எழுந்தரு ளாயே !

என்று பாடி இறைவனைத் துயிலெழுப்புவது போல் 'அடி யேனையும் உன் அடியார்க்கு ஆட்படுத்தி உன் நோக்கத்தை நிறைவேற்றிக் கொள்ள வேண்டும்' என்றுதான் இவர் பிரார்த்திக்கிறார்.

இவரது வேறொரு பிரபந்தமாகிய 'திருமாலை'யைப் பேராழமான கடலுக்கு ஒப்பிடுவர் பெரியவாச்சான்பிள்ளை என்றும், ஆழ்கடலில் 'நீர்த்தெளிவாலே தரை தோற்றுமா போலே சப்தத்தின் செம்மையாலே, ப்ரமேயம் (நியாய அளவையால் அளந்து அறியப்பட்ட பொருள்) கனத்திருக் கச் செய்தேயும் (நிறந்திருந்தும்) உள்ளது அடங்கத் தோற்றும்படி யிருக்கை இப்பிரபந்தத்தின் சிறப்பியல்பு' என்று கூறியுள்ளார். இது இவரது அனுபூதிச் செல்வம். இவர் கண்ட அழகிய மணவாளனை நாமும் இந்த பிரபந் தத்தின் வாயிலாகக் கண்டு பெரும்பேறு பெறக்கூடும்.

தொண்டர் அடிப்பொடி ஆழ்வாருக்குப் பின் திருப் பாணாழ்வாரைக் குறிப்பிடுகிறார்கள். இவரைப் 'பாண்பெரு மாள்' என்றும், 'நம்பாணநாதன்' என்றும் வேதாந்த

தேசிகர் குறிப்பிடுகிறார். 'தொண்டக் குலமே தொழுகுலம்' என்ற கொள்கையைத் திருப்பாணாழ்வாரின் கதையும் வாக்கும் வாழ்க்கையும் நினைவூட்டுகின்றன. இவர் பத்தே பாடல்கள் பாடியிருக்கிறார். இந்தச் சின்னஞ்சிறு பிரபந்தத்தை 'அமலனாதிபிரான்' என்பர் இப் பாடல்கள் பழமறையின் பொருளாகும் என்று கொண்டாடுகிறார் ஸ்ரீ வேதாந்த தேசிகர். இதே கருத்தை இராமானுச நூற்றந்தாதியிலும் காண்கிறோம். இந்தப் பிரபந்தத்தின் முதற் செய்யுள் கவிச்சக்கரவர்த்தியான கம்பன் உள்ளத்தைப் பெரிதும் வசீகரித்திருக்கிறது.

கடைசியாகக் கலியன் என்ற திருமங்கையாழ்வாரைக் குறிப்பிடுகிறார்கள். குமுதவல்லி என்ற காதலியால் இவர் திருந்தி ஸ்ரீவைணவரானார் என்று குருபரம்பரைக் கதைகள் கூறுகின்றன. இவரைச் சூழ்ந்து பல கதைகளும் கற்பனைகளும் வளர்ந்திருக்கின்றன.

கள்வனேன் ஆனேன்:
படிறுசெய் திருப்பேன்

என்று இவர் கூறியிருப்பதிலிருந்து திருடித் திருப்பணி புரிந்தார் என்ற கதை தோன்றியிருக்கக் கூடும், இக்கதையிலிருந்தே வாள்வலியால் இவர் மந்திரம் (திருமந்திரம்) கொண்டார் என்ற கதையும் கிளைத்திருக்கலாம். இத்தகைய கதைகளைக்காட்டிலும் இவரது ஆத்ம சரித்திர ஸாரத்தை இவரது பாசுரங்களாலேயே காண்கிறோம்.

லட்சியத்திற்காக வாழ்க்கையை அர்ப்பணம் செய்து விட்ட பெரியோர்களில் இவரும் ஒருவர். தமது ஆலயத்திருப்பணிகளாலும், பாடல்-தொண்டினாலும், தமதுபகவத்-பாகவத கைங்கரியங்களாலும் இவர் திருவரங்கத்தைப் பாரத தேசமெங்கும் புகழ் பெற்று விளங்கும் பிரபல ஸ்தலங்களில் ஒன்றாக்கினார்.

பொய்ம்மொழி ஒன்று இல்லாத
மெய்ம்மை யாளன்

என்றும்' 'அருள்மாரி' என்னும் இவர் தம்மைச் சொல்லிக் கொள்வதிலிருந்தும்,

மெய்வண்ணம் நினைத்தவர்க்கு
மெய்ந்நின்ற வித்தகனே!

என்று இவர் தம் இஷ்டமூர்த்தியைப் பாடுவதிலிருந்தும், பாசுரங்களில் வரும் வேறு குறிப்புகளிலிருந்தும் இவர் ஸ்ரீவைணவம் என்ற 'தீதில் நன்னெறி'யைப் பின்பற்றி ஒரு மகாத்மா ஆகிவிட்ட வரலாற்றைத் தான் தெரிந்துகொள்கிறோம்.

இந்த ஆழ்வார்க்கெல்லாம் -'மயர்வற மதிநலம் அருளப் பெற்றவர்கள்' என்பது ஸ்ரீ வைணவர்களின் கொள்கை. ஆழ்வார் பன்னிருவரும் பாடிய மொத்தப் பாசுரங்கள் நாலாயிரம். இப்பாடல் தொகுதிக்கு 'நாலாயிர திவ்யபிரபந்தம்' என்று பெயர். 'இந்த உலகின் இருள்நீங்க வந்து உதித்தவர்கள் என்றும், 'அந்தமிழால் நற்கலைகள் ஆய்ந்து உரைத்' தவர்கள் என்றும் இவர்களை மணவாள மாமுனி கூறியுள்ளார்.

வேதவேதாந்தச் சிந்தனைகள் தோன்றிய இடம் வட இந்தியா என்றால், அந்தச்சிந்தனைகளைக் கலையாக்கிய கவிதை பிறந்த தென்னகம் தமிழகம் தான்.



# 6. நாடோடிப் புகழேந்திகள்

இரவின் நிசப்தத்தைக் கடைந்தெழுந்தது புலவர் மணிக்குரல். அவர் புலவர் மணியல்ல, நாடோடிப் புலவர் தான். குரல், மணிக்குரல் - புலவர் மணிகளும் பெருமை கொள்ளத்தக்க கண்டா மணிக்குரல். காலக்ஷேபக் கூடத்தில் உட்கார்ந்திருந்தவர்களுக்கு மட்டுமல்ல; கிராமத்திலே இராச் சாப்பாட்டை முடித்துக்கொண்டு அவரவர் வீட்டுத் திண்ணைகளிலும் திண்ணைப்புறங்களிலும் படுத்தும், உட்கார்ந்தும், சாய்ந்தும், நின்றும், நடந்தும், வெற்றிலைப் பாக்கு மென்றும், புகையிலை போட்டுக்கொண்டும் கேட்டுக் கொண்டிருந்த ஆண்களுக்கும் பெண்களுக்கும் 'சரிநிகர் சமானமாய்'க் கணீரென்று கோவில் மணி போல் முழங்கியது புலவர் குரலோசை. அரட்டையடித்துக் கொண்டிருந்த ஊர் வம்பர்களையும் செவியைப் பற்றி இழுத்துக் கேட்கச் செய்தது.

புலவர், கலைமகளின் படத்திற்கு மாலை போட்டுத் தூப தீபம் காட்டித் தேங்காய் பழம் கடலைச் சுண்டல் நைவேத்தியம் செய்தார். உள்ளுருகிப் பூமாலையுடன் தோத்திரப் பாமாலையும் அணிந்தார்:

நாவில் சரஸ்வதியே,
நான்முகனூர் தேவியரே!
நாவு தவருமல்
நல்லோசை தாரும்அம்மா,
குரலில் குடியிருந்து
குயிலோசை தாரும் அம்மா,

பாவில் நுடியிருந்து
பண்ணழகு தாரும் அம்மா,
பொன்மயில்போல் ஆடிவந்து
பொன்மொழிகள் தாரும் அம்மா;
பொற்பாதம் நான் மறவேன்,
பூவில் வளர்ந்தவளே!
நாவில் வளர்பவளே
நற்பாதம் நான்மறவேன்.
மின்னல் கொடிபோலே;
மின்னி அருள்வாயே
கள்ளமிலா மெய்யறிவே!
கற்பனையாம் களஞ்சியமே!
உள்ளொளியாய் வளர்கின்ற
வெள்ளைமலர்ச் சோதியே!
பாதச் சிலம்பொலிக்கப்
பாவையே! முன் நடவாய்.
தெளிவுற்ற ஞானமே!
தெவிட்டாத தெள்ளமுதே!
மலைமகளின் தோழியே!
திருமகளின் மருமகளே!
அளவற்ற பாக்கியமே,
அற்புதமாம் பொக்கிஷமே!
உன்பாதம் முன்னடக்க,
என்பாடல் பின்னடக்க,
முத்துச் சிலம்பு கொஞ்ச
முன் நடக்க வேணுமம்மா!

இப் பிரார்த்தனையுடன் கர்ணன் கதையைப் பாடத் தொடங்கினர் புலவர்.

கதையைப் பாடிக் காட்டமட்டுமா ஆசைப்பட்டார்? ஆடிஅபி நயித்துக் காட்ட விரும்பினர். மேலும் ஒரு பிரார்த்தனை செய்து, அதை மந்திரம்போல் உச்சரித்தார்.

மாசற்ற தீபம்,
மன்னர் புகழ்விளக்கு,
நேசத்திற்கு ஓர் விளக்கு,
நெடும் பகைக்குத் தான்நெருப்பு.
வானமழை போல் பொழிந்து
வண்மைப்பயிர் வளர்ப்போன்.
கர்ணன் கதையைக்
கருத்துடன் நான்நடிக்க,
மன்னன் கதைக்கு
மாமயிலே! முன்நடவாய்,
அண்ணல் கதைக்கு
அன்னமே! முன்நடவாய்
தப்பாமல் இக்கதைக்குத்
தாயேநீ! முன்நடவாய்

என்றதும், தாயான நாமகளின் தயவு கிடைத்துவிட்டதாகவே தோன்றியது.

புலவர் நடிக்கிறார் கதை நடக்கிறது. புலவர் மறைந்துவிடுகிறார்; தாய் பிரவேசிக்கிறாள். கர்ணனுக்கு முன்னே போய், 'என்னை நீ பகைவர்களின் தாயாக அல்லவா எண்ணிக்கொண்டிருக்கிறாய்? பஞ்சவருக்கு மட்டுமல்ல' வஞ்சகருடன் சேர்ந்து கொண்ட உனக்கும் தாய் நான் தான்-பெற்றெடுத்த தாயார், எனினும் வஞ்சகத் தாயார், ஐயோ! வயிறு எரிகிறது வளர்த்தெடுக்கும் பேறு பெற்றேனில்லை, என்கிறாள். துர்வாசமுனிவர் அன்று அருளிய மந்திரசக்தியால் சூரியனின் அருள் பெற்றுக் கர்ணனைப் பெற்றெடுத்துப்

பெட்டியில் வைத்து ஆற்றிலே மிதக்கவிட்ட அந்தக் கதையைச் சொல்லுகிருள்—துயரம், மானம்' காதல், பிள்ளைப் பாசம்' பச்சாதாபம் முதலான பல்வேறு உணர்ச்சிகளுடன், ஆம்! குந்திதேவியே வந்து பிரலாபிக்கிருள்;

கர்ணு! என் கண்மணியே!
 கன்னிப் பருவமதில்
முன்னே ஒருநாளில்
 முனிவன் துருவாசன்
சொன்னபணி செய்திடவே,
 அன்னவனும் தான் மகிழ்ந்தான்.
நல்லமக்கள் பெற்றிடவே
 சொல்லிவைத்தான் மந்திரங்கள்.
மனமகிழ்ச்சி யாலேஓர்
 மந்திரத்தை உச்சரித்தேன்,
சூரியனும் அவ்வேளை
 சுந்தரனுய் முன்தோன்றி
பாசமாய்க் கர்ணன்என்று
 பாலன் உனையளித்தான்.
ஆயன் பெருமாள்
 அறிந்தவரும் ஓடிவந்தார்.
பெற்ற உனைஎடுத்துப்
 பெட்டியிலே தான் அடைத்து,
உற்ற கங்கை ஆற்றினிலே
 ஓடிவிட்டார் மாயவனுர்.
கட்டி அணைத்துன்னைக்
 கண்குளிரப் பாராமல்
நட்டாற்றிலே விட்டு,
 நான்பாவி ஆனேனே!

குந்தியின் புலம்பல் அத்தனை உள்ளங்களையும் உருக்கி; ஒரு கங்காப் பிரவாகமாய் ஓடச்செய்து விட்டது. பலரும் கண்களைத் துணியால் துடைத்துக் கொண்டார்கள். சிலர் கண்ணீர் பெருகியவண்ணம் கேட்டுக் கொண்டிருந்தார்கள். சபையில் அழுகுரலும்கேட்டது. பெண்கள் குழந்தைகளுடன் வந்திருப்பார்களே, அந்தக் குழந்தைகளின் அழுகுரல் அல்ல; தாயின் அழுகுரல் தான்!

புலவர், 'மகாவித்வ சிரோமணியான புகழேந்திப் புலவரின் பாடலை ஒன்றும் தெரியாத நான் பாடப்போகிறேன்.—ஊர்வசி ஆடப் பேயும்ஆடுவது போல்!' என்ற அவையடக்கத்துடன் ஆரம்பித்தார். ஆனால் இந்தப் புகழேந்தி போல் அந்தப் புகழேந்தி தான் ஆடிப்பாடியிருக்கமுடியுமா? நான்தான் அந்தப் புகழேந்தியைப் பார்த்ததில்லையே! இப்படிக் குந்தியையே வரவழைத்துவிடுவாரென்று கேட்டதுமில்லையே!

இத்தகைய நாடோடிப் புகழேந்திகள் பலர் பலவேறு காலங்களில் தமிழ் நாட்டின் பல பகுதிகளிலும் நாடோடி மெட்டில் கதைப் பாடல்கள் பாடியிருக்கிறார்கள். பழைய புகழேந்திப்புலவர் கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். நாடோடிப் புகழேந்திகளோ தமிழகத்தின் க்ஷீணகதியிலே சென்ற சில நூற்றாண்டுகளுக்குள், பாலைவனத்திடையே தோன்றும் பசும்புல்-தரைகள் போல், தழைத்திருந்து, தமிழ்ப் பொதுமக்களின் கவிதைப் பசியை ஒருவாறு ஆற்ற முயன்றார்கள்.

வேறொரு கிராமத்திலே வேறொரு புகழேந்தி, (நாடோடிப் புகழேந்திகளின் பாடல்களை நன்றாக நடித்துப் பாடுகிறவர்களையும் 'புகழேந்திகள்' என்றே குறிப்பிடுகிறேன்) மதுரை மாநகரின் (பழைய மதுரைதான்) புகழ்படக் கேட்டேன்.

'மதராஸ்' என்ற சென்னை மாநகரம் இன்று மதுரை மாநகரின் புகழை மறைத்துவிட்டது, — ஒரு சிற்பக் களஞ்சியத்தை மறைத்துவிட்ட பெருந் தகரக் கொட்டகை போலே.

மயிலை, திருவல்லிக்கேணிப் பகுதிகள் தவிர, நமது சென்னையின் வயது முந்நூறு. மதுரையின் வயதோ குறைந்த கணக்கில் இரண்டாயிரத்திற்கும் மேல். அன்னிய வியாபாரச் சுரண்டலுக்கும் ஆதிக்கத் திமிருக்கும் ஓர் அறிகுறி சென்னை. பழைய மதுரையோ தமிழகத்தின் உயிர்; தமிழ்க் கலைமகளின் தலைநகரம்; ஒருகாலத்தில் ஆசியாவின் 'ஆதென்ஸ்' நகரம் கிழக்கே நாகரிகத்திற்கும் பண்பாடுகளுக்கும் ஒரு திசை விளக்கு. இந்நகர மான்மியத்தை எத்தனையோ புலவர்கள் புகழ்ந்திருக்கிறார்கள். பக்தர்கள் பாடியிருக்கிறார்கள். பழைய புகழேந்தியும் பாடியிருக்கிறார். எனினும் நாடோடிப் புகழேந்தியையும் கேட்க வேண்டியது தான். இவரைக் கேட்டுத்தான் எழுத்தறிவில்லாத கிராமவாசிகள் தங்கள் 'தாய் மொழியின் இராஜதானி' யைத் தெரிந்து கொண்டார்கள்.

சத்தம் போடாமல் கேளுங்கள். கூடுமானால் தற்கால மதுரையைக் கொஞ்சம் மறந்து பாருங்கள்.

பட்டணமாம் பட்டணமாம்
அழகான பட்டணமாம்,
தென்னவராம் மன்னவரின்
தென்மதுரைப் பட்டணமாம்,
பாண்டியர்கள் ஆளுகின்ற
பாருயர்ந்த பட்டணமாம்,
செந்தமிழின் மாட்சியுள்ள
சீருயர்ந்த பட்டணமாம்,

அழகான தென்மதுரைக்கு
அழகுசெய்யும் ஆலயமாம்;
ஆலயத்தில் வீற்றிருக்கும்
அழகுக் குலதெய்வம்,
அங்கயற்கண் அம்மை,
அழகுள்ள மீனாட்சி,
சொக்கர் பெருந்தேவி
சொகுசாக வாழவைப்பாள்,
அம்மை கலியாணி
அழகாக வாழ்வளிப்பாள்.
ஆலயத்தைச் சூழ்ந்திருக்கும்
அழகான வீதிகளாம்,
திரவியங்கள் தேடித்
திரைகடல்கள் ஓடித்
தரணியெலாம் வாணிபம்செய்
தனவணிகர் வீதிகளாம்.
நவநவமாய் மலர்ந்திருக்கும்
நன்மலர்கள் நறுமணமும்,
சிவமணமும் தவமணமும்,
செந்தமிழின் புதுமணமும்
கவிவாணர் புகழ்மணமும்
கலந்துவரும் வீதிகளாம்.
மங்களம்சேர் எழுமெத்தை
மணிமாட வீதிகளாம்.
சுந்தரம்சேர் கன்மடவார்
பந்துபயில் மேடைகளாம்.
கோட்டைகளாம், கொத்தளமாம்,
கோபுரப்பொன் வாசல்களாம்.

இப்படி விண்ணும் மண்ணும் தழுவிக் கொண்ட இராஜதானியின் வடஇந்தியாவும் தென்னிந்தியாவும் சந்

திக்கிறதாம். அந்த நாளிலேயே தமிழ்ப் பெண்ணுக்கு ஒரு இந்தி மாப்பிள்ளை கிடைத்து விட்டானும். (ஆனால், அந்நாளில் இந்தி பாஷையே கிடையாது!) பாண்டிய ராஜதடாகத்திலே மலர்ச்சிபெற்ற அல்லிராணியை அர்ச்சுனன் மணந்து கொண்டான் அல்லவா? அந்தப் புது மாப்பிள்ளை - தன் இராஜதானியிலிருந்து (இப்போது டெல்லி, அப்போது இந்திரப் பிரஸ்தம்) ரயிலில்லாத காலத்திலே தொலைதூர யாத்திரை செய்து வந்தவன்- அதிசயமாக மதுரை வீதிகளையெல்லாம் பார்த்துக்கொண்டே மீனாட்சியைத் தொழப் போகிறானும். புலவர் பாடுகிறார்;

ஆலம் விழுதொடித்து
அழகாகப் பல்விளக்கி,
வைகை நீர்ஆடி
வகைவகையாய்ப் பட்டுடுத்தி,
சிவாசிவா என்று
திருநீற்றுக் காப்பணிந்து,
ஆடையும் கச்சும்
அணிகளுமாய் ஆணழகன்,
வேந்தர்க்குக் கோல்கொடுக்கும்
வேளாளர் வீதிகளும்,
நாணயமாய் வாணிபம்செய்
நல்வணிகர் வீதிகளும்,
அருளாளர் பொருளாளர்
அறிவாளர் வீதிகளும்,
சேலை விலைமதிக்கும்
சேணியர்கள் வீதிகளும்,
ஆனை விலைமதிக்கும்
அரசர்கள் வீதிகளும்
ஆனை விலைமதிக்கும்
அமைச்சர்கள் வீதிகளும்,

பூமணக்கும், பாமணக்கும்,
புகழ்மணக்கும் வீதிகளும்,
முத்துக் கொழிக்கும்,
முத்தமிழும் தான்கொழிக்கும்,
தேரோடும் வீதியெல்லாம்
நேராய் நடந்துவந்து
பார்உயர்ந்த கோயிலிலே
சீர்உயர்ந்த மீனுளைப்
பாதமலர் தெண்டனிட்டான்,
பார்உயர்ந்த வில்லிவிஜயன்,
மோதிரங்கள் மின்ன
முடிமேல் கரம்குவித்தான்.
'மங்கை மீனுளே!
மலரடிகள் நான்தொழுதேன்;
மதுரைத் துரைச்சியே!
மணவாழ்வு தரவேணும்,
அழகுத் துரைச்சியே!
ஆதரிக்க வேணு'மென்ருன்.
'வண்ணத் துரைச்சியே!
வள்ளியம்மை மாமியே!
கள்ளழகர் தங்கையே!
உள்ளம் இரங்காயோ?
தொண்டர்மனக் கோவிலுக்குத்
தூண்டா மணிவிளக்கே!
மணம் பெற்று நான் வாழ
மனமிரங்க வேணு'மென்ருன்.

இப்பாடல்களைக் 'காதலாகிக் கசிந்து' பாடிய 'புகழேந்தி' இந்தக் காட்சிளைக் கிராமவாசிகளுக்கெல்லாம் அப்படியே பிரத்தியட்சமாக்கி விட்டார், அவர்களுடைய

சௌந்தரிய உணர்ச்சி, பக்திஉணர்ச்சி முதலான உணர்ச்சிகளுக்கெல்லாம் அருமந்த விருந்து செய்தார்.

வேறொரு சமயம், 'திரௌபதியாள்குறம்' என்ற 'புகழேந்தி பாடல்'களைப் பாஞ்சாலங்குறிச்சியைச் சேர்ந்த ஒரு புலவர் வாயிலாக நான் கேட்க நேர்ந்தது. இது மகா பாரதத்தில் இல்லாத ஓர் அதிகக் கதை; அதிசயக் கதை, பாண்டவர்கள் பத்து ஆண்டுகள் வனவாசம் செய்து, பின்னும் இரண்டு ஆண்டுகள் இருக்கும் போது, பாஞ்சாலி தனியாகக் குறத்திவேடம் பூண்டு ஹஸ்தினபுரத்திற்குப் போய்த் துரியோதனன் மனைவியைச் சந்தித்துக் கை பார்த்துக் குறி சொன்னளாம்.

அப்போது பாஞ்சாலி, தான் தென்னுட்டு மலைக் குறத்தியென்று தெரிவித்தாளாம்.

கொச்சிமலை குடகுமலை
எங்கள்மலை நாடு,
குமரேசர் காதலித்த
குறவள்ளி நாடு.
ஆனைமலை பூனைமலை
அழகர்மலை நாடு,
அழகான பொதியமலை
அதுவும் எங்கள் நாடு.

என்று சொல்லிவிட்டுக் குறி சொன்னளாம்.

குறத்தி, தான் லோகமெல்லாம் சஞ்சரித்ததாகவும், இந்திரலோக சந்திரலோகங்களும் குறக் கூடையும் தானுமாய்ச் சுற்றி வந்ததாகவும் தெரிவிக்கிருள். தரைமெழுகிக் கோலமிட்டுப் பிள்ளையார் பிடித்து வைத்துக் குலதெய்வங்களையெல்லாம் கூச்சலிட்டு அழைத்து, ஆகாசவாணியையும்

பூமிதேவியையும் சாட்சியாக்கி, வெறி கொண்டு குறி சொல்லுகிருள். பாண்டவர்களைக் கௌரவர்கள் படுத்திய பாடெல்லாம் சொல்லிப் பாஞ்சாலி, ராஜசபையில் விரித்த கூந்தலைப் படுகளத்திலே முடிப்பாள்' என்று தன்னைக் குறித்துக் கூறி முடிக்கிருள்.

இவையெல்லாம் புலவர் வாயிலாகக் காட்சி காட்சி யாய்த் தோன்றின. வியாசர் விட்ட குறையை - அவர் செய்யாத விருந்துக் குறையைத் தமிழ் நாட்டிலே ஒரு நாடோடிப்புகழேந்தி பூர்த்தி செய்துவிட்டார். பாஞ்சாலங் குறிச்சிப் புகழேந்தி அதைக் கூட்டியும் குறைத்தும் பாடி எங்களையெல்லாம் பரவசப்படுத்திஞர். பாஞ்சால நாட்டைச் சேர்ந்த பாஞ்சாலியைப் பாஞ்சாலங் குறிச்சிக்கே சொந்த மாக் கொண்டது போல் பாடித் தீர்த்துவிட்டார்.

இப்பாஞ்சாலி கதையைப் புகழேந்தி ஏன் பாடினுர் என்பதையும் விளக்கி, புதுமைப் புகழேந்தி அதே மெட்டில் பாடித் தீர்த்தார்:

பாவையர்க்கு நல்ல
 பயனளிக்கும் என்று
பூவையர்க்கு நல்ல
 பொழுதுபோக் கென்று,
புகழ்விளங்கப் பாடினுர்
 புகழேந்தி யாம்புலவர்.
கேட்டவர்கள் எல்லாம்
 கீர்த்தி மிகவிளங்க,
ஆல்போல் தழைத்து,
 அருகுபோல் வேரோடி

மூங்கில்போல் சுற்றம்
முசியாது வாழவென்று
வாழ்த்திக் கவிபாடி
வாழ்வளித்தார் புகழேந்தி.

நாடோடிப் புகழேந்திகள் வடநாட்டுப் பாரதக் கதையை மட்டும் சொந்தமாக்கிக் கொண்டார்கள் என்பதில்லை. கோவலன் கண்ணகி கதையையும் நாடோடி மெட்டில் பாடியிருக்கிறார் ஒரு புகழேந்தி. சிலப்பதிகாரக் கண்ணகிக்கும் இந்த நாடோடிக் கண்ணகிக்கும் அதிகம் தொடர்பு இல்லை. இப்பாடல்கள் அவ்வளவு ரஸமான பாடல்களும் அல்ல. சிலம்பும் கையுமாகக் கடுங்கோபாவேசத்துடன் காளிதேவி போல் கண்ணகியம்மை, நீதி தவறிய பாண்டியன் முன் தோன்றும் சந்தர்ப்பம் பயங்கரமாய்க் கோரமாய்ச் சித்திரிக்கப்படுகிறது.

அரசனுக்குத் தன்னை 'யார்?' என்று அறிவித்துக் கொள்ளும் போது கண்ணகி

திருடனின் தேவிநான்
தேர்வேந்தைக் காணவந்தேன்;
கள்வனின் தேவிநான்,
காவலைக் காணவந்தேன்!

என்கிறாள். இத்தகைய பாடல்கள் மூலமாய்க் கண்ணகி கதை, சிலப்பதிகாரம் என்ற பேரையும் கேட்டிராத கிராம வாசிகளுக்கெல்லாம் ஒருவாறு பரவியிருந்தது. இப்பாடல்களில் சிலவற்றை இடிக்குரலில் ஒரு புலவர் பாடக் கேட்டிருக்கிறேன். இவருக்குக் 'குரலோசை' கொடுத்தவள் நாமகளல்ல, போர்மகளான காளியென்றே தோன்றியது. புலவர், 'கண்ணகி' என்ற தம் உச்சரிப்பிலேயே எங்களைப் பயமுறுத்தி விட்டார்!

